POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. 76 - TN - MS C. P. P. 55
ANNA Leading Progressive Tamil Daily of the People

# ஓட்டல்சாப்பாடு 2 ரூபாயாக குறைப்பு

Regd. No. TN-MS (C) 422 Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 9] சென்னை 8-8-1985 வியாழன் வெளியூர் 9-8-1985 வெள்ளி [இதழ் 287

## அரசு முயற்சி வெற்றி

### 2 இட்லி 60-காசு, தோசை 70-காசு, காபி 50 காசு; ஓட்டல் அதிபர்கள் சம்மதம்

**சென்னை, ஆக. 8 ஓட்டல்களில் இட்லி, தோசை மற்றும் பலகாரங்களின் விலையைக் குறைக்க அரசு தீவிர நடவடிக்கை எடுத்துள்ளது.**

ஓட்டல் உரிமையாளர்களுடன் இதுபற்றி அமைச்சர் திருநாவுக்கரசு பேச்சு நடத்தினார்.

ஓட்டல் பண்டங்களின் விலை குறைய புரட்சித் தலைவர் அரசு தீவிர நடவடிக்கை எடுத்து வருகிறது.

அதற்காக ஓட்டல் உரிமையாளர்களை உணவு அமைச்சர் எஸ். திருநாவுக்கரசு அழைத்து இன்று பேச்சு நடத்தினார்.

கோட்டையில்...

இந்த பேச்சுவார்த்தை அரசு தலைமை செயலகத்தில் நடந்தது.

அமைச்சர் திருநாவுக்கரசு மற்றும் உணவுத் துறை செயலாளர் பத்மநாபன், துணைச்செயலாளர் மச்சேந்திரநாதன், உணவு வழங்கு துறை நிர்வாக இயக்குனர் கே. ஏ. நம்பியார், உணவு துறை கண்காணிப்பு டி ஐ ஜி வைகுந்த் மற்றும் அதிகாரிகள் பேச்சுவார்த்தையில் கலந்து கொண்டனர்.

ஓட்டல் உரிமையாளர்கள் சங்கத் தலைவர் புருஷோத்தமன், செயலாளர் பாலகிருஷ்ணன் துணைத்தலைவர் சீனிவாசன் கோவை ஓட்டல் அதிபர் சங்கத்தலைவர் தாமோதரசாமி நாயுடு மதுரை ராமநாதபுரம் மாவட்ட ஓட்டல் உரிமையாளர் சங்கப்பிரதிநிதி ஆர்.சீனிவாசன் தமிழ்நாடு ஓட்டல் உரிமையாளர் சங்கப் பிரதிநிதி விஜயகுமார் ஓட்டல் பயனீட்டாளர் சங்கப் பிரதிநிதிகள் ராதாகிருஷ்ணன், லோகநாதன் குமாரவேலு, டி என் சிவதாணு ஆகியோர் கலந்து கொண்டனர்.

#### விலைகுறைப்பு

இந்தக் கூட்டத்திற்கு ஒத்துழைப்பு தந்த அதிபர்களுக்கு முதல்வர் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

புதியவிலை நிர்ணயத்தை அமல்படுத்துவதை கண்காணிக்க மாநிலம் முழுதும் கண்காணிப்புகுழு அமைக்கப்படும்.

இந்த விலைகளை அமல் படுத்தாவிட்டால் சட்டப்பூர்வமாக நடவடிக்கை மேற்கொள்ளப்படும்.

இவ்வாறு திருநாவுக்கரசு கூறினார்.

#### விலைப் பட்டியல்

ஓட்டல் அதிபர்கள் கூட்டம்முடிந்த பின் அமைச்சர் திருநாவுக்கரசு கூறியதாவது:-

ஓட்டல்களில் நிர்ணயிக்கப்பட்டிருந்த ஏ.பி, சி தரம் நீக்கப்படுகிறது.

எல்லா ஓட்டல்களிலும் நாளை முதல் புதிய விலைகள்படி பண்டங்கள் விற்கப்படும்.

2 இட்லி (100 கிராம்) 60 காசு

சாதாதோசை 70காசு.

காபி (120 மில்லி) 50 காசு டீ (120 மில்லி 40 காசு.

அளவு சாப்பாடு (500 கிராம் சாதம் உட்பட 2 ரூபாய் என்று விலை நிர்ணயிக்கப்படுகிறது.

76ம் ஆண்டு நிர்ணயிக்கப்பட்டதுபோல் இப்போதும் நிர்ணயிக்கப்படுகிறது.

இதற்கு ஓட்டல் அதிபர்களே அறிவிப்பு வெளியிடுவார்கள்.

## ரயில் தடம் புரண்டு சாவு 58

மாவுது, ஆக. 8—ரெயில் தடம் புரண்டு தரையில் தாறுமாறாக ஓடியதால் 58 பேர் இறந்தனர்.

இந்த சம்பவம்மொராதாபாத் பிக்கில் வட்க்கு பகுதியில் நாம்புலா என்ற இடத்தில் நடந்தது.

கல்கத்தா அருகே கானா மற்றும் தளித் ரயில் நிலையங்களுக்கிடையே ஒரு ரயில் விபத்துக்குள்ளாகி ஒருவர் இறந்தார், 36 பேர் படுகாயம் அடைந்தனர்.

தடம் புரண்டுநின்றிருந்த சரக்கு ரயில் மீது கஞ்சன் ஜங்கா எக்ஸ்பிரஸ் மோதியதால் இந்த விபத்து நேரிட்டது.

## எம்எல்ஏக் களை தம்பித்துரை வரவேற்றார்

புதுடெல்லி, ஆக. 8—சோவியத் ரஷ்யாவில் நடைபெற்ற உலக இளைஞர் மாநாட்டில் கலந்து கொள்ளச்சென்ற கழக சட்டமன்ற உறுப்பினர்கள் டாக்டர்கே. பி.ராமலிங்கம், திண்டுக்கல் பிரேம்குமார், மயிலாடுதுறை, தங்கமணி, ஆகியோர் நேற்று இரவு 2 மணிக்கு டெல்லி வந்து சேர்ந்தனர்.

டெல்லி விமான நிலையத்தில் மக்களவை துணை சபாநாயகர் தம்பித்துரை வரவேற்றார்.

டெல்லியிலிருந்து கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ்ரயிலில்புறப்படும்கழக எம். எல். ஏக்கள் 10ந் தேதி காலை சென்னை சென்று சேருகிறார்கள்.

## "செத்தவர்" வேலை தேடி வந்தார்

ஜபல்பூர், ஆக. 8- செத்துப் போனதாக அறிவிக்கப்பட்ட ரெயில்வே ஊழியர் உயிரோடு மீண்டும் வேலை கேட்டு வந்தார்.

அரசை ஏமாற்றி 25 ஆயிரம் ரூபாய் மோசடி செய்ததாக அவரைப் போலீசார்கைதுசெய்தனர்.

குவாலியர் நகரரெயில்வே லோகோஷெட்டில் ஆலதின் சுக்கா என்பவர்பணிசெய்து வந்தார் 1982-ம் ஆண்டு முதல் இவரைக் காணவில்லை. தன்னுடையகணவர் செத்துப் போய்விட்டதாக அவருடைய மனைவி ரெயில்வே நிர்வாகத்திற்கு சான்றிதழ் கொடுத்தார். தனது கணவருக்கு உரிய கிராசுட்டி பிராவிடண்ட் நிதி ஆகியவைகளையும் பெற்றுக் கொண்டாள்: போதாக்குறைக்கு மாதம்தோறும் பென்ஷனும் வாங்கிக் கொண்டு வந்தாள்.

தனது கணவரின் சடலத்தை அடக்கம் செய்ய ரெயில்வே நிர்வாகத்திடம் இருந்து பணமும் பெற்றுக் கொண்டாள்.

ஆனால்இப்போது செத்து போனதாகஅறிவிக்கப்பட்ட அந்த ரெயில்வே ஊழியர் உயிரோடு வந்தார் தனக்கு மீண்டும் வேலை அளிக்க வேண்டும் என்றுகோரினார்

ரெயில்வே நிர்வாகத்தை ஏமாற்றி 25 ஆயிரம் ரூபாய் மோசடி செய்ததாக அவர் கைது செய்யப்பட்டார்.

## பஞ்சாபில் தேர்தல்: கழக நிலைக்கு பிரதமர்ராஜீவ் ஆதரவு

புதுடெல்லி, ஆக. 8—பஞ்சாப் மாநிலத்தில் விரைவில் தேர்தல்நடத்த வேண்டும் என்று பிரதமர் கூட்டிய எதிர்க் கட்சித் தலைவர்கள் கூட்டத்தில் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் கோரியது கழகத்தின் இந்தக்கோரிக்கையை தெலுங்கு தேசக் கட்சி, தி.மு.கழகம், காங்கிரஸ் (எஸ்) கட்சி ஆகிய கட்சிகள் ஆதரித்தன.



பஞ்சாபில் உடனடியாகத் தேர்தல் நடத்துவதை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, இந்தியக்கம்யூனிஸ்ட் கட்சி, ஜனதா, பாரதீய ஜனதா, லோகதளம் ஆகிய கட்சிகள் எதிர்த்தன.

### விரைவில் தேர்தல்

இந்திரா காங்கிரசைப் பொறுத்த வரையில் பஞ்சாபில் விரைவில் தேர்தல் நடத்த வேண்டும் என்று விரும்புகிறது.

இதுபற்றி எதிர்க்கட்சிகளிடையே உடன்பாடு ஏற்படவில்லை. எனவே இது சம்பந்தமாக லோங்கோவாலைக் கலந்து முடிவு எடுக்கலாம் என்று பிரதமர் ராஜீவ் கூறினார்.

பிரதமர் ராஜீவ் காந்தி கூட்டிய எதிர்க்கட்சித் தலைவர்கள் கூட்டத்தில் அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்தின் சார்பாக இரா. மோகனரங்கம், பி. குழந்தைவேலு, தெலுங்கு தேசக் கட்சி சார்பாக மாதவ ரெட்டி, உபேந்திரா மார்க்சிஸ்ட் கட்சி சார்பாக வாசுதேவ் பட்டாச்சாரியா திபேன்கோஷ், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி சார்பாக இந்திரஜித் குப்தா, இந்திரதீப்சின்கா ஜனதா சார்பாக மதுதண்டவதே குருபாதசாமி தி.மு.க. சார்பாக வி.கோபால்சாமி ஆகியோர் கலந்து கொண்டனர்.

பஞ்சாபில் தேர்தலைதள்ளிப் போடுவதால் பிரச்னைகளையும் தள்ளிப் போடுகிறோம் என்ற எண்ணம் ஏற்பட்டுவிடக் கூடாது என்று பிரதமர் ராஜீவ் காந்தி கருத்துத்தெரிவித்தார்.

பஞ்சாபில் எந்தக் கட்சி வெற்றி பெறுகிறது என்பது பற்றி நான் கவலைப்படவில்லை அங்கே கவர்னர் ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைக்கவேண்டும் ஜனநாயக அரசு அமைய வேண்டும் என்பதுதான்தமது விருப்பம் என்றும் ராஜீவ் தெரிவித்தார்.

## சென்னை நகர வளர்ச்சி திட்டங்களுக்கு உலக வங்கி ரூ. 1 கோடி உதவி

சென்னை, ஆக. 8—சென்னை பெருநகர் வளர்ச்சி திட்டங்களுக்கு உலகவங்கி ரூபாய் 1 கோடி நிதிஉதவி செய்ய ஆலோசித்து வருகிறது. சென்னை வந்துள்ள உலக வங்கி குழுவினர் தமிழக அரசு உயர் அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்துகிறார்கள்.

சென்னை பெருநகர் வளர்ச்சி திட்டங்களுக்கு உலக வங்கி 3கோடியே8லட்சம் ரூபாய் நிதிஉதவி செய்யும்திட்டத்தைமேற்கொண்டுள்ளது, இந்தத் திட்டம் கடந்த 1980ஆம் ஆண்டில் இருந்தே செயல் படுத்தப்பட்டு வருகிறது.

அநேகமாக இந்தத் திட்டப்பணிகள் இந்த ஆண்டு டிசம்பர் மாத இறுதிக்குள் முடிவதாக இருந்தது. இப்போது மேலும் அது ஒரு வருடம் நீடிக்கப்பட்டுள்ளது.

திட்டப்பணிகள்பிரிவு பிரிவாக மெற்கொள்ளப்பட்டு வருகின்றன. சாலை மேம்பாடு, கழிவு நீர் சாக்கடை ஏற்படுத்துவது. சாலைகளில் போக்குவரத்து சிக்னல்அமைக்கும்திட்டங்கள், சுகாதார மேம்பாடு திட்டங்கள், குப்பை கூளங்கள் ஆகியவற்றைதுரிதமாக அப்புறப்படுத்துதல், கழிவுப் பொருட்களை பயனுள்ள காரியங்களுக்குபயன்படுத்துவதுஇப்படிபல்வேறுதிட்டங்கள் செயல்படுத்தப் பட்டு வருகின்றன.

குடிசைப் பகுதிகளைமாற்றி அமைத்துபலமாடிகட்டிடங்கள் கட்டிதருவதற்கான திட்டங்களும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

சென்னை பெருநகர் வளர்ச்சிக்குழுமம் மூலம் இந்தத்திட்டங்கள் செயல் படுத்தப்பட்டு வருகின்றன' கழிவுப் பொருட்களில் இருந்து பல்வேறுபயனுள்ள பொருட்களை தயாரிக்கும் திட்டத்துக்கு சென்னை மாநகராட்சிசுமார் ரூபாய் 1 கோடியே 20 லட்சம் செலவு செய்துள்ளது.

உலகவங்கி குழுவினர் சென்னை வந்துள்ளனர், அவர்கள் சென்னை நகரில் செயல்படுத்தப்படும் பல்வேறு திட்டங்களை பார்வையிட்டனர், சென்னை மாநகராட்சி, தமிழக வீட்டுவசதி வாரியம், குடிசை மாற்று வாரியம் ஆகியவற்றின் தலைவர்கள் மற்றும் உயர்அதிகாரிகள் ஆகியோருடன் உலக வங்கிக் குழு ஆலோசனை நடத்துகிறார்கள். தமிழக அரசு உயர் அதிகாரிகளுடனும் அவர்கள் ஆலோசனை நடத்துகிறார்கள்.

சென்னை நகருக்கு மேலும்1கோடி ரூபாய்உதவி அளிக்கப்படவிருக்கிறது. இந்த நிதியில் சென்னையில் பல்வேறு வளர்ச்சித்திட்டங்கள் மேற் கொள்ளப்படும். ஈவான்? ரோட்னர், மற்றும் எம்.பி கிநீங்சன் ஆகியோர் கொண்ட உலக வங்கிக் குழுவினர் சென்னை பெருநகர் வளர்ச்சிக்குழுமத்தைச் சேர்ந்த அதிகாரிகளுடனும் ஆலோசனை நடத்துகிறார்கள்.

## ஏர் இந்தியா விமான விபத்து: ரூ 90கோடிநட்டஈடுகேட்டுவழக்கு

டொரண்டோ, ஆக.8- ஏர் இந்தியா விமானம் ஒன்று ஜூன் 23-ந் தேதி அயர்லாந்து அருகே அட்லாண்டிக் கடலில் நொறுங்கி விழுந்து 329 பேர் இறந்தனர் அல்லவா? சீக்கிய பயங்கர வாதிகள் வைத்த வெடிகுண்டு வெடித்து இந்த விபத்து நேர்ட்டதாகத் தெரிய வந்துள்ளது.

இறந்தவர்கள் குடும்பத்திற்கு 74 மில்லியன் டாலர் (சுமார் 90 கோடி ரூபாய்) நட்டஈடு கேட்டு டொரண்டோ உயர்நீதி மன்றத்தில் கனடா வழக்கறிஞர் வழக்குத் தொடர்ந்துள்ளார்.

ஜூன் 23-ந் தேதி விபத்துக்குள்ளான விமானத்தில் பயணம் செய்தவர்கள், விபத்து நேரத்தில் உள்ள பதைப்பும் உடல்உபாதையும் கொண்டு துடி துடித்து இறந்திருக்கிறார்கள். அவர்கள்சார்பில் அவர்கள் குடும்பத்திற்கு நட்டஈடு கேட்டு வழக்கு தொடரப்பட்டுள்ளது என்று அந்த வழக்கறிஞர் டோனால்ட் பிரவுன் நிருபர்களிடம் கூறினார்.

நீதிமன்றத்திற்குச் செல்லாமலே இந்த தாவாவைப் பைசல் செய்து கொள்ளலாம் என்றும்அந்த வழக்கறிஞர் கூறினார்.

மூன்று இந்திய அதிகாரிகள் கனடாவுக்குச் சென்று வான்கூவர் விமானநிலையத்தைப் பார்வையிட்டனர்

விபத்து எவ்வாறு நடந்தது என்று விசாரணை நடத்துகிறார்கள்.

## ஜனாதிபதி மகனுக்கு சிறைத் தண்டனை

லண்டன் அருகில் உள்ள காட்விக் விமான நிலையத்தில் வந்திறங்கிய சியேலியோன் ஜனாதிபதி மகன் ஜேம்ஸ் ஸ்டீவன்ஸ் (வயது 45) அவரது மனைவிபொதாதக்கர் (வயது38) உறவினர் பத்மதா மன்சரே ஆகியோரின் பெட்டிகள் சோதனையிடப்பட்டன. அவர்களின் பெட்டிக்குள் போதை மருந்து இருந்தது.

வழக்கை விசாரித்த நீதிபதி, ஜனாதிபதி மகன் ஸ்டீவன்சுக்கு 3 வருட சிறைத் தண்டனைவிதித்தார்.

அவரது மனைவி தக்கருக்கும் உறவினர் மன்சரே என்றபெண்ணுக்கும்தலா 30 மாதமும் 21 மாதமும் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டது.

## தெருவோர கொடி கம்பம் நீக்கியதில் அரசியலா?

### அமைச்சர்கள் கே. ஏ. கே. ப. உ. ச. மறுப்பு

சென்னை, ஆக. 8—நடைபாதை கொடி கம்பங்களை அகற்றுவதில் எந்த அரசியலும் இல்லை மக்களுக்கு இடையூறாக இருக்கும் கொடிக்கம்பங்கள் எந்தக் கட்சியை சேர்ந்ததாகஇருந்தாலும் அதைஅகற்றிவருகிறோம் என்று அமைச்சர்கள் கே. ஏ.கே.யும், ப.உ.சவும் கூறினார்.

பொதுமக்களுக்கும் போக்குவரத்துக்கும் இடையூறாக இருக்கும் கொடி கம்பங்கள் சிலைகள் ஆகியவற்றை அகற்றும் பணியினை சென்னைமாநகராட்சி மேற்கொண்டுள்ளது

சென்னை நகரில் ராயப்பேட்டை பகுதியில் மாநகராட்சி மேற்கொண்ட நடவடிக்கைகள் குறித்து பார்வையிடவும் பொது மக்களை சந்தித்து கருத்து கேட்கவும் அமைச்சர்கள் கே. ஏ. கே. வும், ப. உ. ச. வும், இன்று (8-ந் தேதி) காலை பீட்டர்சாலை. கான்ரான் ஸ்மித்சாலை, கோபாலபுரம் முதல்தெரு, 2-ம் தெரு அவ்வை சண்முகம் சாலை. கௌடியாமடம் சாலை, ராயப்பேட்டை, நெடுஞ்சாலை, சீனிவாசபுரம் முதல் தெரு மற்றும் இரண்டாம் தெரு, பொன்னுசாமி நாயக்கன் தெரு ஆகிய பகுதிகளில் அதாவது சுமார் 3 கிலோ மீட்டர் தூரம் 1¼ மணி நேரத்திற்கு மேல் பாத யாத்திரையாக சென்று பார்வையிட்டனர்.

#### ப. உ. ச. உத்தரவு

பீட்டர்ஸ் சாலையில் சத்யம் தியேட்டர் அருகே ஒரு கழிவுநீர் தொட்டி சரியானமூடி இன்றி இருந்தது. இதைப் பார்வையிட்ட அமைச்சர் ப.உ.ச. உடனடியாக அதை சரி செய்யுமாறு அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார்.

கான்ரான்ஸ்மித்சாலையில் நுகர் பொருள் வாணிபக் கழகஅலுவலகம்முன்பிருந்த கொடிக் கம்பங்கள் அகற்றப்பட்டிருப்பதையும் அமைச்சர்கள் கே.ஏ.கே. வும். ப.உ.ச.வும் பார்வையிட்டனர். கோபாலபுரம் 2ம்தெருவில் ஒரு இடத்தில் செங்கல்தூள்களும், மண்ணும்கொட்டிவைக்கப்பட்டிருந்தது. இதைப் பார்த்த அமைச்சர்கள் அவற்றை அகற்ற அதிகாரிகளைக் கேட்டுக் கொண்டனர்.

அவ்வை சண்முகம் சாலையில் கழகக் கொடி கம்பங்கள் நேருசிலை, கருமாரி அம்மன் கோயில் ஆகியவைகளும் இடித்து அகற்றப்பட்டிருப்பதை அமைச்சர்கள் பார்வையிட்டனர்.

கௌடியாமடம் சாலையில் பல இடங்களில் ரோடு ஓரங்களில் சேறும் சகதியும் இருப்பதைக் கண்ட அமைச்சர் ப. உ. ச. அதை உடனடியாக சீர் செய்யுமாறு அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார்.

சீனிவாசபுரம் முதல்தெரு மற்றும் இரண்டாம் தெரு, பொன்னுசாமி நாயக்கன் தெரு ஆகிய இடங்களில் கால்நடைகளின் கழிவை சாலைகளில் கொட்டி இருப்பதையும் அதனால் கழிவுநீர் தேங்கியிருப்பதையும் அமைச்சர்கள் பார்வையிட்டனர்.

ஏராளமான பொது மக்களும் அமைச்சர்களிடம் சுகாதாரக் கேட்டிற்கு வழிவகுக்கும் கால்நடைகளை வேறு இடங்களுக்கு மாற்றுங்கள் என்று கோரினர்.

சாலை ஓரங்களில் போக்குவரத்துக்கு இடையூறாக அமைக்கப்பட்டிருக்கும் கொடி கம்பங்கள் போன்றவற்றை அகற்றுவதற்கு மக்கள் தங்கள் மகிழ்ச்சியை தெரிவித்தனர்.

#### மாதந்தோறும் புதிய தார்சாலை

பொதுவாக மாநகராட்சி ஊழியர்கள் இன்னும்கொஞ்சம் சிறப்பாக செயல்பட்டால் நகரை சுத்தமாக வைத்திருக்கலாம் என்பதை பலர் அமைச்சர்களிடம் தெரிவித்தனர், பொது மக்கள் கோரிக்கைகளையும் ஆலோசனைகளையும் அமைச்சர்கள் கே.ஏ.கே, யும், ப. உ. ச.வும் கேட்டனர்.

பின்னர் அமைச்சர் ப. உ. ச.நிருபர்களிடம் கூறியதாவது!-

நடைபாதைகளை சுற்றி வந்தோம். நடைபாதைகளில் இருந்த அரசியல் கட்சி கொடிக் கம்பங்கள் கோவில்கள்போன்றவற்றை அகற்றிய பின்புதான் இவைகள் எவ்வளவு இடைஞ்சலாக இருந்தன என்பதை அறிய முடிந்தது இவை அகற்றப்பட்டபின் பொது மக்கள் சாலைகளில் சிரமமின்றி நடக்க எவ்வளவு உதவியாக இருக்கின்றது என்பதைப்பார்த்தோம்.

இனிமேல் மாதந்தோறும் 10 கி-மீ தூரத்திற்கு நடைபாதைகள் தார் ரோடாக அமைக்கப்படும். இது பற்றி சென்னை மாநகராட்சி தனி அதிகாரிகளுக்கு உத்தரவிட்டுள்ளோம்.

மாதந்தோறும் சென்னை நகரில் 10 புதிய கழிப்பிடங்கள் (கட்டணம்) கட்டி முடிக்கப்படும்.

சென்னை நகரிலுள்ள கால்நடைகளைவெளியிடங்களுக்கு அப்புறப்படுத்துவது தொடர்பாக அமைக்கப்பட்ட குழு ஆகஸ்டு 15ந் தேதிக்குள் அறிக்கைதர கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளது.

அந்த அறிக்கை அரசுக்கு கிடைத்ததும் அதன்மீது அரசு நடவடிக்கை எடுக்கும். இந்தப் பிரச்சினைக்கு நிரந்தர தீர்வுகாண வேண்டும் என்ற அடிப்படையில் செயல்படுகிறோம். நிரந்தர தீர்வு காணப்படும்.

சில இடங்களில் நீதிமன்ற தடைபெற்றிருக்கிறார்கள். நாங்கள் நீதிமன்றத்தை மதிக்கிறோம். அதனால் அந்த இடங்களில் தற்போது நடைபாதை கடைகளை அகற்றும் பணி தடைபட்டுள்ளது.

கடைக்காரர்கள் சூரிய ஒளியை தடுப்பதற்கு 'சன்சேடு' அமைக்க கேட்டிருக்கிறார்கள். சன்சேடுக்கு மட்டும் பயன்படுத்துவோம் என்று உத்தரவாதம் அளித்தால் அதற்கு அனுமதி தரலாம் என்று முடிவெடுத்துள்ளோம். எவ்வளவு தூரம் சன்சேடு அமைக்கலாம் என்பது குறித்து மாநகராட்சி தீர்மானித்துமுடிவெடுக்கும்.

நடைபாதை கடைகளையோ, கொடிக் கம்பங்களையோ, அகற்றும் போது அவர்கள் எந்த் அரசியல் கட்சியை சார்ந்தவர்கள் என்று பார்ப்பதில்லை. அண்ணா சிலைகளை கூட ஏராளமான இடங்களில் அகற்றியுள்ளோம். எனவே இந்தப் பிரச்சினையில் கட்சி மாச்சரியங்களுக்கு இடமில்லை.

இவ்வாறு அமைச்சர் ப.உ.ச. கூறினார்.

உடனிருந்த அமைச்சர் கே.ஏ.கே. இந்தப் பிரச்சினையில் அரசியல் நோக்கம் எதுவுமில்லை. மக்கள் நலன் கருதியே செய்கிறோம்,

#### அகல பாதை

உதாரணத்திற்கு ராயப்பேட்டை பகுதியை எடுத்துகொண்டால் இங்கு 20 ஆயிரம் குழந்தைகளுக்கு மேல் பள்ளி செல்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட நேரத்தில் மொத்தமாக அவர்கள் பள்ளிக்கு செல்லும் போது பாதைகளில் இருக்கும் கடைகள்கொடிக்கம்பங்கள் போன்றவை இடையூறாக இருக்கின்றன. ரோடு சற்று அகலமாக இருந்தால் குழந்தைகள் சாலைகளை இலகுவாகக் கடக்க முடியும். இவற்றைக் கருத்தில் கொண்டுதான் இந்த நடவடிக்கைகளை மேற்கொள்கிறோம் என்று கூறினார்.

மாநகராட்சி தனி அதிகாரி மாதவசர்மாக நிருபர்களிடம் கூறுகையில் சென்னை நகரில் 1500 கி. மீ. சாலை உள்ளது. இதில் 300 கி. மீட்டர் தூரம் பஸ்கள் செல்லக்கூடியது, மாதம் 10 கி.மீ. வீதம்இந்தபாதை சீரமைக்கப்படும். இதற்கு 50 லட்சம் ரூபாய் தரஅரசு சம்மதித்துள்ளது. என்றார்.

இந்த பேட்டியின் போது தலைமைச் செயலாளர் அந்தோணி, மாநகராட்சி ஆணையாளர் மலைச்சாமி, மேலவை உறுப்பினர் அங்கமுத்து ஆகியோரும் இருந்தனர்.



திருப்தி

அறுசுமாடி வீட்டில் அமர்ந்து அறுசுவை யன்னம் புசித்தால் தான் திருப்தி ஏற்படும் என்பதில்லை. உழைப்புக்குப் பின் ஏற்படும் பசிக்கு ஒலைக்குடிசைக் கூழேயாயினும் திருப்தியைக் கொடுக்கும்

—பேரறிஞர் அண்ணா



சகதி

நமது இளைஞர்களும் யுவதிகளும் அநேக காரியங்களை ஆற்ற வேண்டும். அதற்காக அவர்கள் தங்கள் சக்தியை வீணில் இழந்து விடாமல் காப்பார்களாக.

—தந்தை பெரியார்

## செக்ஸ் கல்விபற்றி ராஜ்யசபையில் கேள்வி

புதுடெல்லி, ஆக. 8—செக்ஸ் கல்வி பற்றி மாநிலங்களவையில் ஜே ங்க ஜெயின் என்ற உறுப்பினர் கேள்வி எழுப்பினார் பாடத் திட்டத்தில் செக்ஸ் கல்வியை புகுத்த திட்டம் உண்டா என்றும் அவர் கேட்டார்.

இதற்கு பதிலளித்து அமைச்சர் மரகதம் சந்திரசேகர் கூறுகையில்-

அரசு இதுவரை அது பற்றி பரிசீலிக்கவில்லை என்றும் எனினும் மனித பிறப்பு சம்பந்தப்பட்ட பாடங்கள் அறிமுகப்படுத்தப் பட்டுள்ளதாகவும் கூறினார்.

# சுதந்திரத்திற்கு வித்திட்ட மகாஜனசபை 100 வயது

சென்னை மகாஜனசபை! ஆம்...

ஒரு நூற்றாண்டு காலத்திற்கு முன்பு தென்னிந்தியாவில் தோன்றிய ஓர் அமைப்பு

மக்களின் சேவைக்காக பல நிறுவனங்கள் இன்று வரை தோன்றியிருந்தாலும் சென்னை மகாஜனசபை தான் முதன் முதலாகத் தோன்றியதாகும்.

இந்திய தேசிய காங்கிரஸ் தோன்றியதற்கு முன்பே 1884 ம் ஆண்டில் பொது மக்களின் கருத்துக்களை துணிவுடன் எடுத்துக் கூறுவதற்காக தோன்றிய அமைப்பு தான் இது.

பம்பாயில் இந்திய தேசிய காங்கிரஸ் கூடுவதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பாகவே சென்னை மகாஜனசபை தோன்றியது,

சென்னை அண்ணாசாலையில் எல். ஐ. சி. கட்டிடத்திற்குப் பக்கத்திலே சென்னை மகாஜனசபை இருக்கிறது.

### மக்கள் நலப்பணி

அமைதியாக ஆரவாரமின்றி இன்றைக்கும் பல மக்கள் நலப்பணிகளை செய்து வருகிறது.

நாட்டு மக்களின் குறைகளை, படும்கொடுமைகளை எடுத்துச் சொல்லி தீர்த்து வைக்க அனைத்திந்திய அளவில் ஒரு அமைப்பு தேவை என்ற எண்ணம் உருவாகியது சென்னை மகாஜன சபை உறுப்பினர்களிடையேதான்.

அடையாறு தியசாபிகல் சங்க மாநாட்டில் மகாசபை உறுப்பினர்களிடையே உருவாகிய இந்த சீரிய கருத்துதான் 'இந்திய தேசிய காங்கிரஸ்' என்ற குழந்தையாக பம்பாயில் உருக்கொண்டது.

அதைத் தொடர்ந்து மகாஜனசபை தனது அரசியல் கருத்துக்களையெல்லாம் எடுத்துக் கூறியுள்ளது.

1910ம் ஆண்டு கல்வி, மாநில தன்னாட்சி, பொது நிதியும் பொருளாதாரமும் பொது மக்கள் நல்வாழ்வு என்ற குழுக்கள் அமைக்கப்பட்டு ஒவ்வொரு குழுவும் தன் பணிகளைச் செவ்வனே செய்யத்தொடங்கின.

### "வெள்ளையனே வெளியேறு"

1911ம் ஆண்டு சபையின் உறுப்பினரான சீனிவாச சாஸ்திரி மாவட்டங்கள் தோறும் சுற்றுப் பயணம் செய்து ஆங்காங்கே உள்ள மக்களின் சிக்கல்களை தீர்த்துவைக்க அனுப்பப் பெற்றார்.

'வெள்ளையனே வெளியேறு' என்ற வீரக் கனல் பொருந்திய போராட்டம் துவங்கிய போது இந்த மகாஜன சபையின் தலைவர் உட்பட உறுப்பினர்கள் அனைவரும் கலந்து கொண்டு ஓராண்டு முதல் ஈராண்டு வரை சிறைத் தண்டனை அடைந்திருக்கிறார்கள்.

1896ம் ஆண்டு மகாத்மா காந்தியடிகள் மகாஜன சபையில் உரையாற்றியிருக்கிறார்.

மகாஜன சபை பொன் விழாவை ஆசிய ஜோதி பண்டித ஜவகர்லால் நேரு தொடங்கி வைத்திருக்கிறார்

### தேசியத் தலைவர்கள்

இந்திய திருநாட்டின் இணையில்லாத் தலைவர்களான கோபாலகிருஷ்ண கோகலே, பாலகங்காதர திலகர், அன்னிபெசண்ட் அம்மையார், சி. ஆர். தாஸ், லாலா லஜபதிராய், பாபுராஜேந்திர பிரசாத், மூதறிஞர் ராஜாஜி, ஆசப்அலி ஆகியபலர் இந்த மகாஜன சபைக் கூட்டங்களில் பங்கேற்று உரையாற்றியிருக்கிறார்கள்.

சென்னை பத்திரிகையாளர் சங்கம் தனது நடவடிக்கைகளை துவங்கியதே சென்னை மகாஜன சபை கட்டிடத்தில் தான்.

இன்றைக்கும் சென்னை மகாஜனசபை கட்டிடம் சென்னை பத்திரிகையாளர் சங்கத்திற்கு ஒரு பாலமாக இருந்துவருகிறது.

1970ம் ஆண்டு முதல் மகாஜனசபைதன் அரசியல் நடவடிக்கைகளோடு நூலக மேம்பாடு, படிப்பறை அமைத்தல் தேசிய அளவில் பொருட்காட்சிகளை அமைத்தல் ஆகியவற்றிலும் ஈடுபடத் தொடங்கியது.

### படிப்பகம

சென்னை மகாஜனசபை, தனது கட்டிடத்திலேயே 3000 விலையுயர்ந்த அரிய நூல்களைவைத்திருக்கிறது.

உள்நாட்டு— வெளிநாட்டு ஆராய்ச்சியாளர்களுக்கும் இவை பெரிதும் உதவுகின்றன.

அரசியலில் பொருளாதாரத்தில், சமூகவியலில் ஒரு பெரும் தேசிய இயக்கமாக திகழ்ந்த சென்னை மகாஜனசபையின் வரலாறு இல்லாமல் இந்திய விடுதலைப் போராட்ட வரலாறு இல்லை.

அந்த 'மகாஜனத்திற்கு' இன்று நூறாவது ஆண்டு!

இந்த நூறாவது ஆண்டில் நாமும் இருந்து பங்கேற்பது கிடைத்தற்கரியபேறு

மகாஜன சபையின் நூற்றாண்டுவிழா வரும் 9, 10, 11ந்தேதிகளில் சென்னையில் நடைபெறுகிறது

9ந்தேதி கவியரங்கம், 10ந்தேதி நடைபெறும் தியாகிகள் விழாவில் பக்தவத்சலம், ம. பொ. சி. கருப்பையா மூப்பனார், சி. சுப்பிரமணியம் உட்பட பல தலைவர்கள் பேசுகிறார்கள் 11ந் தேதி விழாவில் துணை ஜனாதிபதி ஆர். வீ. பங்கேற்கிறார்.

நூறாண்டு காணும் மகாசபைக்கு புதியதாக 6மாடி கட்டிடம் கட்டப்படவுள்ளது.

## தூத்துக்குடி 3-வது அனல் மின் உற்பத்தி

சென்னை, ஆக. 8—தூத்துக்குடி அனல்மின் நிலையத்தின் 3-வது பிரிவு இம்மாதம் மத்தியில் மீண்டும் செயல்படத் துவங்கும் என்றுமின் வாரியத்தலைவர் விஜயராகவன் நிருபர்களிடம் தெரிவித்தார்.

யந்திர கோளாறு காரணமாக கடந்த பிப்ரவரி 1-ந் தேதியிலிருந்து செயல்படாமல் இருந்த இந்த யந்திரத்தை 'பெல்' நிறுவனம் சீர்செய்து விட்டது. விரைவில் உற்பத்தி துவங்கும். இதில் 210 மெகாவாட் மின்சாரம் உற்பத்தியாகும்.

கடந்தவெள்ளியன்று நீர்த்தேக்கங்களுக்கு 29 மில்லியன் யூனிட் மின் உற்பத்திக்குத் தேவையான அளவுக்கு நீர் வரத்து இருந்தது, சனியன்று 19 மில்லியன் யூனிட் அளவுக்குக் குறைந்தது. ஞாயிறு அன்று 13 மில்லியன் யூனிட் அளவுக்கு நீர் வரத்து இருந்தது என்றும்விஜயராகவன் குறிப்பிட்டார்.

## பிரதமர்ராஜீவ் பிறந்த நாள் இளைஞர் தினமாகிறது

சென்னை, ஆக. 7—பிரதமர் ராஜீவ்காந்தியின் பிறந்த நாளை இளைஞர்கள் தினமாக தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி கொண்டாடுகிறது.

ஆகஸ்டு 20ந் தேதியன்று இந்த இளைஞர் விழாவை சிறப்பாக கொண்டாட தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் பழனியாண்டியும் காங்கிரஸ் நூற்றாண்டு விழாக்குழு மாநில அமைப்பாளர் எஸ். கே. டி. ராமச்சந்திரனும் ஏற்பாடு செய்து வருகின்றனர்.

சென்னை நகர் எல்லா ஆலயங்களிலும் 20 ந் தேதி லட்சார்ச்சனையும் வழிபாடும் நடத்துகின்றனர்.

## தஞ்சையில் நல்ல மழை

தஞ்சாவூர், ஆக. 8—தஞ்சை மாவட்டத்தில் பரவலாக நல்ல மழை பெய்திருக்கிறது.

கீழ் அணைப் பகுதியில் 85 மில்லி மீட்டர் மழையும் திருக்காட்டுப் பள்ளியில் 47 மில்லி மீட்டர் மழையும் பெய்திருக்கிறது.

தஞ்சை நகரில் மழை காட்டோ கொட்டு என்று கொட்டியது. தஞ்சையில் 43 மில்லிமீட்டரும். பூதலூரில் 40 மில்லி மீட்டரும். நீடாமங்கலத்தில் 39 மில்லி மீட்டரும் மழை பெய்திருக்கிறது.

## தமிழகத்தில் அரிசிகையிருப்பு

தஞ்சாவூர், ஆக. 8—தமிழகத்தில் இன்றும் ஒரு ஆண்டுக்கு தேவையான அரிசி கையிருப்பு இருக்கிறது என்று உணவு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

ஒரு மாதத்திற்கு ஒரு லட்சம் டன் அரிசி தேவைப்படுகிறது. அந்தக் கணக்கில் பார்த்தால் ஒரு ஆண்டுக்குத் தேவையான அரிசி கையிருப்பில் இருக்கிறது என்றுஅவர் கூறினார்.

## அமைச்சர் நிகழ்ச்சிகள்

### வீராசாமி

ஆக. 9.ந்தேதி காலை 4.30 மணி தஞ்சாவூர், 10 மணி திருவாரூர், மாலை 6 மணி தலையா மங்கலம். 10ந் தேதி 12 மணி கூத்தூர் மாலை தஞ்சை.

ஆக. 11ந்தேதிபாபநாசம் 12ந் தேதி கும்பகோணம், 13ந் தேதி தஞ்சை.

# உடல் ஊனமுற்றோர் யார், யார்? தமிழகத்தில் கணக்கு எடுப்பு ஆரம்பம்

சென்னை, ஆக. 8—உடல் ஊனமுற்றோர் பற்றிய விவரங்களை கிராமம் மற்றும் நகர்ப்புறங்களில் வீடு வீடாகச் சென்று கணக்கெடுத்து அவர்களுக்கு உதவும்மகத்தான பணியை மத்திய அரசு மேற் கொண்டுள்ளது.

உடல் ஊனமுற்றோருக்கு உதவுவதில் மற்ற மாநிலங்களைவிட தமிழகம் சிறந்து விளங்குகிறது. புரட்சித் தலைவர் ஆட்சிக்கு வந்த பின்தான் சமுதாயத்தில் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த ஊனமுற்றோருக்கு வாழ்வளிக்கும் பல திட்டங்கள் செயல்படுத்தப்பட்டு வருகின்றன.

### புதிய அணுகுமுறை

இந்தத் திட்டத்தை மேலும் சிறப்புற நடத்த மத்திய அரசு புதிய அணுகுமுறையை கையாளுகிறது. இதன்படி ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு மாவட்டத்தைத் தேர்ந்தெடுத்து அந்த மாவட்டத்திலுள்ள நகர் மற்றும் கிராமப்புறங்களில் வீடு வீடாகச் சென்று உடல் ஊனமுற்றோர் பற்றி கணக்கெடுத்து அவர்களுக்கு உதவ மத்திய அரசு முன்வந்துள்ளது.

இத்திட்டத்தின் கீழ் தமிழகத்தில் செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள காட்டாங் கொளத்தூர் ஊராட்சியும், திருக்கழுக்குன்றம் ஊராட்சியும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

இந்த இரு ஊராட்சி பகுதிகளிலும் உள்ள உடல் ஊனமுற்றோருக்கு உதவ 7 லட்சரூபாயில்திட்டங்கள் தீட்டப்பட்டுள்ளன.

மத்திய அரசின் ஐந்தாண்டுத் திட்டமான இத்திட்டத்துக்கு இந்த ஆண்டில் தமிழகம், மகாராஷ்டிரம், மேற்கு வங்காளம், உத்திர பிரதேசம் ஒரிசா ஆகிய மாநிலங்களும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

இத்திட்டத்துக்கு உதவும் பணியில் ஈடுபட சென்னை கே. கே. நகரிலுள்ள புனர்வாழ்வு மருந்தக மையம் உள்ளிட்ட 4 மையங்களை மத்திய அரசு தேர்ந்தெடுத்துள்ளது. உடல் ஊனமுற்றோர்களுக்கு மருத்துவ ரீதியாக உதவும் பணியை இந்த மையங்கள் மேற் கொள்ளும்.

### அமெரிக்கா உதவி

இந்திய அரசுக்கு அமெரிக்காவிலுள்ள தேசிய உடல் ஊனமுற்றோர் ஆராய்ச்சி மையமும் உதவுகிறது.

இத்திட்ட இயக்குனர் மேனன் சமீபத்தில் கே. கே. நகர புனர்வாழ்வுமருந்தகத்திற்கு விஜயம் செய்து அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்தினார். இந்த திட்டம் அடுத்த ஆண்டு மேலும் 6 மாநிலங்களுக்கு விரிவு படுத்தப் படவுள்ளதாகவும் அவர் கூறினார்.

கண்பார்வை யற்றோர்களுக்கும் இத்திட்டத்தின் கீழ் உதவிகள் வழங்கப்படுவதாகவும் மேனன்கூறினார்.

### ஆயிரம் பேருக்கு வேலை வாய்ப்பு

சென்னையிலுள்ள மையம் 80 பேர்களுக்கு கிராமங்களில் பணிபுரிய பயிற்சி அளித்துள்ளதாகவும் தற்போது ஒவ்வொரு கிராமத்திலும் சுமார் 10 உடல் ஊனமுற்றோர் இருப்பதாகவும் ஆயிரம் பேருக்கு இந்த ஆண்டில் வேலை வாய்ப்பு வழங்கப்படுமென்றும் தெரிவித்தார்.

சென்னை கே.கே.நகர் மருந்தகத்துக்கு வந்த அமெரிக்க பிரதிநிதி நந்தா உடல் ஊனமுற்றோருக்கு உதவுவது எப்படி என்பது குறித்து இந்தியர் சிலருக்கு அமெரிக்காவில் பயிற்சி அளிக்கப்படுமென்று தெரிவித்தார்.

இத்திட்டத்தின் கீழ் உடல் ஊனமுற்றோருக்கு பயிற்சி அளிக்கப்பட்டு வேலை வாய்ப்புவழங்கபட்வுள்ளது.

# 7-வது திட்டத்தில் ரூ. 35 கோடியில் வீடு: நல்லுசாமி தகவல்

மதுரை, ஆக 8—வீட்டு வசதி வாரியத்தின் மூலம் 7வது ஐந்தாண்டு திட்ட இறுதிக்குள்ரூபாய்34.800 கோடி செலவில் வீடுகள் கட்டிமுடிக்கப்படும் என்று வீட்டு வசதித்துறை அமைச்சர் நல்லுசாமி கூறினார்.

இந்திய பொது நிர்வாக கழகத்தின் மதுரை கிளை சார்பில்நடைபெற்ற நிகழ்ச்சியில் "தமிழகத்தில் வீட்டு வசதி வாரியப் பணிகள்" என்ற தலைப்பில் அமைச்சர் நல்லுசாமி பேசினார். அப்போது அவர் கூறியதாவது:

வீடுகளைக் கட்டுவதற்கு கிராமங்களில் கிடைக்கும் மூலப் பொருட்களைப்பயன் படுத்துவதன் மூலம் சிமிண்ட் தட்டுப்பாட்டை குறைக்கலாம்.

வீடுகள் கட்ட கடன் வழங்குவதில் இந்தியாவிலேயே தமிழகம் தான் அதிக பட்சமாக ரூபாய் 1.70,000 கொடுக்கிறது. மத்திய அரசு கூட வீடுகட்ட ரூபாய் 1,20,000 மட்டும்தான் கொடுக்கிறது.

### தமிழகம் முன்னணி

ஹட்கோ, எல். ஐ சி. வீட்டு வசதி நிறுவன கடன் பெறுவதில் இந்தியாவிலேயே இரண்டாவது இடத்தைத் தமிழகம் பெறுகின்றது.

7வது ஐந்தாண்டு திட்ட இறுதிக்குள் ரூபாய் 34 800 கோடி ரூபாய் செலவில் வீட்டு வசதி வாரியத்தின் மூலம் வீடுகள் கட்டி முடிக்கப்படும். இவற்றை நிறைவேற்ற அதிக அளவில் பணம் தேவை.

1981ம் ஆண்டு கணக்குப்படி 4 லட்சம் பேருக்கு தனிப்பட்ட வீடுகள் தேவைப்படுகின்றன.

1987-ம் ஆண்டை வீடில்லாதவர்களுக்கு ஒரு வீடு என்று சர்வதேச ஆண்டாக கொள்ளும் போழுது தமிழகம் முன்னணியில் நின்று அதை செய்யும்.

### வீடுகட்ட கடன் உதவி

தமிழகத்தில் திருச்சி சென்னை, கோவை, மதுரை சேலம் ஆகிய நகரங்களில் வீட்டு வசதி வாரியத்தின் பிரிவு அலுவலகங்கள் ஏற்படுத்தப்பட்டு உள்ளன.

உலக வங்கியின் உதவியுடன்ரூபாய்500 கோடி செலவில் குடிசை குதிகளை மேம்படுத்த வீடுகள் கட்ட திட்டமிடப்பட்டுள்ளது.

1985—86ஆம் ஆண்டில் 1?,273 வீடுகள் ரூபாய் 52½ கோடி செலவில் வீட்டு வசதி வாரியத்தின் மூலம் கட்டப்பட உள்ளன.

கிராமப் புறங்களில் வீடுகள் கட்ட ரூபாய் 6000 கடனாக வழங்கபடுகின்றது. ஆதிதிராவிடர் நலன் திட்டத்தின்கீழ்ரூபாய் 4500 வீடுகட்ட வட்டி இல்லாத கடனாக கொடுக்கப்படுகிறது.

சமூக சேவை அமைப்புகள், பொது நிறுவனங்கள் ஏழை, எளியோருக்கு இலவசமாகவீடுகளைகட்டித்தர முன்வர வேண்டும்.

இவ்வாறு வீட்டு வசதித் துறை அமைச்சர் நல்லுசாமி கூறினார்.

நிகழ்ச்சிக்கு மதுரைமாநகராட்சி ஆணையாளர் தேவராஜ் தலைமை வகித்தார். கே. எஸ். நடராஜன் நன்றி கூறினார்.

# ஸ்டவ் வெடித்து விபத்து: ஒருவர் சாவு; இருவர் உயிர் ஊசல்

மதுரை, ஆக. 8—ஸ்டவ் வெடித்து ஒரு குடும்பத்தை சேர்ந்த மூன்றுபேர் தீயில் கருகினார்கள். ஒருவர் இறந்தார் இரண்டு பேர் உயிருக்கு, ஆபத்தான நிலையில்மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருகின்றனர்.

மதுரை தெற்கு வெளிவீதியில் உள்ள வேலாயுதம் பிள்ளை தெருவில் வசிப்பவர் பிரேம்குமார். (வயது 25) இவர் லாட்டரி சீட்டு வியாபாரம் நடத்துகிறார். இவர் மனைவி சுஜாதா. இவர் பள்ளிக்கூடம் ஒன்றில் தட்டச்சராக வேலை பார்த்து வருகிறார். இவர்களுக்குகார்த்திக்என்ற 3மாத குழந்தை இருக்கிறது.

நேற்று இவர்கள் வீட்டில் இருந்து அலறல் சப்தம் கேட்டது. பக்கத்து வீட்டுக்காரர்கள் எல்லாம் ஓடிவந்தார்கள். அலறல் சப்தம் கேட்ட இவர் வீட்டில் நேரம் ஆக ஆக புகை அதிகமாகி கொண்டுவந்தது கதவு மூடப்பட்டு இருந்தது. கதவை திறந்து உள்ளே பார்த்த போது தீக்காயங்களுடன் மூன்று பேர் துடித்தனர். எங்களை காப்பாற்றுங்கள் என்று அலறினார்கள்.

தீக்காயங்களுடன் வெளியே ஓடி வந்தனர். அப்பொழுது மழை பெய்து கொண்டிருந்தது தீக்காயத்தில் தண்ணீர் பட்டவுடன் தீ அணைந்தது. ஆனால் புண்ணாகி விட்டது 3பேரும் மருத்துவமனைக்கு கொண்டு செல்லப்பட்டனர். மருத்துவ மனையில் சிகிச்சை பலன் இன்றி பிரேம்குமார் இறந்துவிட்டார். தாயும் 3 மாத குழந்தையும் ஆபத்தான நிலைமையில் தீவிரமாக சிகிச்சை பெற்று வருகின்றனர், இருவரும் அபாய கட்டத்தை தாண்டவில்லை என்று டாக்டர்கள்கூறினார்கள்.

கணவன்-மனைவி-குழந்தை மூவரும் விபத்தில் சிக்கியது எப்படி என்பது மர்மமாக உள்ளது. காபி போடும் பொழுது ஸ்டவ் வெடித்ததால் அனைவரும் தீயில் சிக்கியதாககூறப்படுகிறது. 2ஸ்டவ் அடுப்புகள் அவர்கள்வீட்டில் உள்ளது. இரண்டும் எந்த வித சேதமின்றி உள்ளதாக கூறப்படுகிறது. ஸ்டவ் வெடித்ததா அல்லது தற்கொலை முயற்சியா என்பது மர்மமாக உள்ளது. இச்சம்பவம் குறித்துகாவல் துறையினர் தீவிர விசாரணை செய்து வருகின்றனர்.

# நூதன சைக்கிளில் 54-நாடுகளில் சுற்றிய இந்திய இரட்டையர்கள்

பெங்களூர், ஆக். 8— பெங்களூரை சேர்ந்த இருவாலிபர்கள் 5-ஆண்டுகளில் 54 நாடுகளுக்கு நூதன சைக்கிளில் சென்று உலக சாதனை புரிந்துள்ளனர்.

பெங்களூரைச் சேர்ந்த வாலிபர்கள் பி. கே. ஸ்ரீதர் (வயது-26.) சுடேஷ்குமார் (வயது-25.) இந்த இருவாலிபர்களுக்கும் சைக்கிளிலேயே உலகத்தைச் சுற்றிப்பார்க்க வேண்டும என்ற நூதன ஆசை ஏற்பட்டது. தங்கள் ஆசையை நிறைவேற்ற இந்த வாலிபர்கள் 1980 செப்டம்பர் மாதம பெங்களூரிலிருந்து தங்கள் பயணத்தைத் துவக்கினர்.

இந்த வாலிபர்கள் மேற்கொண்ட பயணம் சாதாரணமானதல்ல, சைக்கிளிலேயே செல்லும போது எத்தனையோ இடர்பாடுகளைச் சந்தித்தனர் நியூயார்க் நகரில இந்த இளைஞர்கள் வழிப்பறி கொள்ளைக் காரர்களிடம சிக்கினர். தாய்லாந்து நாட்டிலோ இந்த இளைஞர்களையே கடத்திச் சென்றனர். இதுமட்டுமல்ல சவுதி அரேபியாவில் அவமானங்களையும, அவமரியாதையையும் சந்திக்க வேண்டி இருந்தது.

தங்கள் லட்சியத்தை அடைய துன்பங்கள், துயரங்களை மனத்துணிவுடன் இந்த வாலிபர்கள் ஏற்றுககொண்டனர்

பல நாடுகளுக்கு செல்லும்போது விசா இருக்க வேண்டும். விசா பெறுவதற்காக சைக்கிளிலேயே பலமுறை ஓடி எடுத்து ஒரு வழியாக விசாவையும் பெற்று பலநாடுகளைச்சுற்றினர்

இந்த வாலிபர்கள தங்கள் பயணத்தை மேற்கொண்டபோது இவர்களுககு இந்திய அரசு எந்த உதவியும செய்யவில்லை, இந்தியா எங்களுக்கு உதவாவிடினும் இந்தியாவுக்கு புகழ் சேர்க்கும் எங்கள பயணததை கைவிடமாட்டோம் என்ற உறுதியுடன் இருந்த இந்த வாலிபர்களுக்கு கர்நாடக அரசு தலா ரூபாய் மூவாயிரம்வழங்கியது.

இந்தப் பணத்தில் தங்கள பயணத்திற்கான நூதன சைக்கிள்களை வாங்கி தங்கள லட்சிய பயணத்தை மேற்கொண்டனர்

ஸ்ரீதரும் சுடேஷும 5-ஆண்டுகளில் 54 நாடுகளை சுற்றியுள்ளனர் 1 லடசத்து 25 ஆயிரம் கிலோ மீட்டரை சைக்கிளிலேயே கடந்த இந்த வாலிபர்கள தங்கள் சைக்கிள்சுற்றுப் பயணத்தை முடித்து டெல்லி வந்துள்ளனர்,

இந்திய நாட்டுககு புகழ் சேர்த்த இந்த வாலிபர்களைப் பிரதமர் ராஜீவும், ஜனாதிபதி ஜெயில்சிங்கும் பாராட்டியுள்ளனர்,

டெல்லியிலிருந்து பெங்களூர் வந்து கொண்டிருக்கும் இந்த வாலிபர்களுக்கு வழி நெடுக உற்சாக வரவேற்பு தரப்பட்டு வருகிறது

தங்கள் சுற்றுப்பயணத்தை முடித்து பெங்களூருக்கு வரும இந்த வாலிபர்களுக்கு வரும் 12-ந் தேதி கர்நாடக அரசு மாபெரும் வரவேற்பு தந்து பாராட்ட இருக்கிறது

அதுமட்டுமின்றி இந்த இளைஞர்களின் சைக்கிள் சுற்றுப்பயணத்தைகுறித்த விசேஷ டாக்குமெண்டரி படத்தையும் கர்நாடக அரசு எடுக்க உள்ளது

54 நாடுகளில் சுற்றிய வாலிபர்கள தங்கள் சைக்கிள் சுற்றுப்பயணத்தை முடித்து டெல்லி வந்ததும பத்திரிகை நிருபர்களை சந்தித்தனர். தங்கள் பயணம் பற்றி குறிப்பிட்ட வாலிபர்கள



இந்தப் பயணம் தங்களுக்கு புத்துணர்ச்சியையும பரந்த அறிவையும்தந்துள்ளதாக தெரிவித்தனர்

பல மொழி பேசும பல்வேறு நாட்டு மக்களை சந்தித்து அவர்களது கலாச்சாரம், கல்வி அறிவு போன்றவற்றை அறிய ஆவல் கொண்டதால் தாங்கள் இந்தப்பயணத்தை மேற்கொண்டதாக அந்த வாலிபர்கள் கூறினார்கள

சைக்கிளில் சவாரி செய்வது தங்கள் பொழுது போக்கு எனவே உலகையே சைக்கிளில் சுற்றிவர தீர்மானித்து சைக்கிள் பயணத்தை மேற்கொண்டோம் என்றும் அவர்கள தெரிவித்தனர்

சைக்கிள்தான் எங்களை உலகறியச் செய்தது. அதன் மூலமதான் உலகில் வாழும் ஏழை'பணக்கார மக்கள் நகர. கிராமப்புற மக்களை நாங்கள் சந்திக்க நேர்ந்தது என்றும் இந்த வாலிபர்கள் பெருமையுடன் கூறினர்

தங்கள் பயணத்தின் போதே இந்த வாலிபர்கள் தாங்கள் சந்தித்த இடையூறுகள்- அனுபவங்கள் ஆகியவற்றைத் தொகுத்து பயணக்கட்டுரையாகவும் எழுதியுள்ளனர்.

தங்கள் சைக்கிள் பயணத்தின்போது இடையூறுகளையும், அவமரியாதைகளையும் மட்டுமல்ல இனிமையான உபசரிப்பையும், அன்பான வரவேற்பையும் தாங்கள் பெற்றதை மறவாது குறிப்பிட்ட இந்த வாலிபர்கள் நல்மனதுடைய மக்கள் பலரின் ஒத்துழைப்பால் தங்கள் சாப்பாட்டுச் செலவு, தங்கும் செலவு போன்றவற்றை சமாளித்ததையும் பெருமையுடன் கூறினர்.

இந்த வாலிபர்களுக்கு தங்கள் பயணத்தின் போது பல நாடுகளுக்கு செல்வதால் மொழி பிரச்சினையாக இருந்தது. எனினும தங்கள் மன உறுதியில் இதையும் வென்றதோடு அராபிக், ஜெர்மன், சீன மொழிகளை கற்றுள்ளதாகவும இந்தப் பயணம் தங்கள் அறிவு வளர்ச்சிக்கு பெரிதும் உதவியதாகவும் தெரிவித்தனர்.

ஒவ்வொரு நாட்டின் கலாச்சாரத்திலும் நன்மைகளும் உள்ளன, தீமைகளும் உள்ளன என்று குறிப்பிட்ட இந்த வாலிபர்கள் வேகமாக வளர்ந்து வரும மேற்கத்திய நாகரிகத்தை தாங்கள் விரும்பவில்லை என்றும் தெரிவித்தனர்

தாங்கள சுற்றிய நாடுகளில்தங்களைவெகுவாக கவர்ந்தது ஜப்பான் நாடுதான் என்றுகுறிப்பிட்ட வாலிபர்கள் நவீன தொழில் நுட்பவியலில் ஜப்பான் கண்டுள்ள வியத்தகு சாதனைகளையும் தெரிவித்தனர்.

எகிப்து மக்கள் நேரு மீது கொண்டுள்ள மதிப்பையும் கிழக்கு மற்றும் தெற்கு ஆசிய மக்கள் இந்தியா மீது கொண்டுள்ள அபிமானத்தையும்தங்கள் பயணத்தின்போதுவெகுவாகக்கண்டதாகவும ஸ்ரீதரும, சுடேஷும தெரிவித்தனர்

தாய்நாட்டிற்காக தாங்கள் இன்னும் ஏதாவது வேண்டும் என்ற லட்சியத்துடன் இருக்கும் இந்த வாலிபர்களில் பொறியியல் டிப்ளமோ பெற்றுள்ள சுடேஷ் தான் ஒரு பொறியியல் பட்டதாரி ஆக விரும்புவதாகவும், ஸ்ரீதர் தனது எம். எஸ். சி. பட்டப்படிப்பை முடிக்க இருப்பதாகவும் தெரிவித்தனர்.

உலக இளைஞர்கள் ஆண்டில் இந்தியாவுக்கு மகத்தான சாதனையை தேடித்தந்த இந்த வாலிபர்கள் தாய் நாட்டிற்கு பெருமை சேர்க்கும் மேலும் பல உன்னத சாதனைகளைப்புரிவார்கள் என்பது திண்ணம்.

## ஏலவிற்பனை

1. Jawanthra, Bhansali 92 K. H. Road, Ayanvaram Madras—23 (1.1.80 முதல் 30.6 84 வரை) ஏலத்தேதி 23.8.85 அன்று பகல் 11 மணிக்கும்,

2. T. Premraj & Co 4 Choolaimedu High Road, Madras—94 1.1.80 முதல் 10.6.84வரை ஏலத்தேதி 23.8.85 அன்று பகல் 10 மணிககும்

3. A. Gudarmal Jain 308 K.H. Road Aynavaram Madras—23 1.1.80 முதல் 30.4.84 வரை ஏலத்தேதி 30.7.85 அன்று மதியம் 1 மணிக்கு இருந்த ஏலம் 23.8.85, அன்று மதியம் 1 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது,

4. Indirabai, 308 K.H. Road, Ayanavaram Madras-23. (1-4-80 முதல் 30-4-84 வரை) ஏலத்தேதி 30-7-85 அன்று மதியம் 2 மணிக்கு இருந்த ஏலம் 23-8,85 அன்று மதியம் 2 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது.

5. L. MohanLal Jain, 54, N.M.K. Street Ayanavaram Madras-23. (31-12-83 வரையும், 31-1-80 முதல் 30-3-84 முடிய) ஏலத் தேதி 26-8-85 அன்று பகல் 10 மணிக்கும்.

6. C. Bhawarlal Jain 177, Chnalpuram, Indira Nagar Madras-20 (1-1-80 முதல் 30-4-84 வரை) ஏலத்தேதி 26-8-85 அன்று பகல் 12 மணிக்கும்,

7. Hasthimal Dhol Chand jain, 144, M.H. Road Perambur Madras-11 (1-1-80 முதல் 31-5-84 முடிய) ஏலத்தேதி 26-8-85 அன்று மதியம் 1 மணிக்கும்,

8. G. Vijay&Co 85 T.V. Puram, Choolaimedu Madras-94 (1-3-84 முதல் 30-6-84 வரை) ஏலத்தே தி 28-8-85 அன்று பகல் 10 மணிக்கும்,

9. Bhansali & co, 181, N.M.M.Road, Madras 94. (1-1-80 முதல் 30-6-84 வரை) ஏலத்தேதி 28-8-85 அன்று பிற்பகல் 12 மணிக்கும்.

10. Mahaveer & Co 180. N.M.M. Road, Choolai Medu, Madras—94 (1-1-80 முதல் 30-6-84 வரை) ஏலத்தேதி 28-8-85 அன்று மதியம் 2 மணிக்கும்,

11. 19119 M.Mothila 3,Jain, Khanstreet, Choola Medu. Madras—94 (1-11-79 முதல் 30-6-84 வரை) ஏலத்தேதி 28-8-85 அன்று மதியம் 3 மணிக்கும்,

12. Raichand Jain, 41, St, Mary's Road, Abirama Puram, Madras—18 (1-1-80 முதல் 30-4-84 வரை) ஏலத்தேதி 29-8-85 அன்று பகல் 11 மணிக்கும்.

13 Nemi Chand Manak Jain, 43, K.H. Road, T. Nagar, Madras-17 (1-1-80 முதல் 30-12-83 வரை) ஏலத்தேதி 29-8-85 அன்று மதியம் 12மணிக்கும்

14 H. Sampathraj Jain 169, Metlc St, Aynawaram Madras-23 (1-1-80 முதல் 30-5-84 வரை) ஏலத்தேதி 29-8-85 அன்று மதியம் 2 மணிக்கும்,

15 Hanis Ghoudry 3, Cemetry Road Madras-30 (1-6-83 முதல் 30-6-84 வரை) ஏலத்தேதி 29-8-85 அன்று மதியம் 3 மணிக்கும்,

16. Mangal chand&co, 87, A.P.Road, Madras-112 (1-8-79 முதல் 30-6,84 வரை) ஏலத் தேதி 30-8-85 அன்று பகல் 10 மணிக்கும்,

17. Mittalal Jain, 38, Villag Road, Nungambakkam, Madras—34. (1-1-80 முதல் 30-4.84 வரை) ஏலத் தேதி 30-8-85 அன்று பகல் 11 மணிக்கும்,

18. M. Champalla, 34, Village Road, Nungambakkam, Madras—34. (1-1-84 முதல் 30-6-84 வரை) ஏலத் தேதி 30-8 85 அன்று மதியம் 12மணிக்கும்,

19. S Hasthimal Chordia, 60 2, P.H Road, Madras-10. (1-1-80 முதல் 31-12-83 வரை) ஏலத் தேதி 30 8-85 அன்று மதியம் 2 மணிக்கும்.

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன் — வெள்ளி அல்லாத பொருட்களை வருவாய் துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் M தரம் சந்த் ஜெயின், 150 சச்சிதானந்த தெரு, சென்னை 12 மாவட்ட அதிகாரிகளின் உத்தரவுப்படி மேற்குறிப்பிட்டுள்ள ஏலத் தேதிகளில் ஏலம் போடுவார்.

# பாகிஸ்தானுக்கு பதிலடி தருவோம்

## அணுகுண்டு தயாரிக்கும் போக்கு: இந்தியா கடும் எச்சரிக்கை

**புதுடெல்லி, ஆக. 8- பாகிஸ்தான் அணுகுண்டு தயாரிக்குமானால் அதை முறியடிக்க இந்தியா எப்போதும் தயார் நிலையில் உள்ளது என்று மத்திய வெளி விவகார துணை அமைச்சர் குர்ஷீத் ஆலம்கான் உறுதியுடன் கூறினார்.**

அண்டை நாடானபாகிஸ்தான் அணுகுண்டு தயாரிக்கப்போவதாக அச்சுறுத்தி வருவது பற்றி மாநிலங்களவையில் உறுப்பினர்கள் சரமாரி கேள்விகளை எழுப்பினார்கள். நாட்டுக்கு எந்த விதமான ஆபத்து நேர்ந்தாலும் அதை ஒட்டு மொத்தமாக தீர்த்துக்கட்ட நாம்தயாராகஇருக்க வேண்டும் என்றும் உறுப்பினர்கள் அவையில் வலியுறுத்திப் பேசினார்கள்.

பாகிஸ்தான் அணுகுண்டு தயாரிக்கப் போவதாக அறிவித்திருப்பது பற்றிய கவன ஈர்ப்புத் தீர்மானத்தின் மீது உறுப்பினர்கள் பேசியதற்கு மத்திய அமைச்சர் குர்ஷீத் ஆலம் கான் விளக்கம் அளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:—

நாட்டின் பாதுகாப்பு நடவடிக்கைகளில் அரசு தீவிர கவனம் செலுத்திவருகிறது. எந்த நாட்டின் அச்சுறுத்தலுக்கும் இந்தியா ஒரு போதும் பணிந்துவிடாது. நாட்டிற்கு ஆபத்து ஏற்படுமானால் அதை முறியடிக்க இந்திய ராணுவம் தயார் நிலையில் உள்ளது.

### அஞ்ச வேண்டாம்

பாகிஸ்தான் அணு குண்டு தயாரித்தால் அதற்காக நாம் அஞ்ச வேண்டியதில்லை.

நமது பலத்தையும், திறமையையும் யாரும் குறைத்து மதிப்பிடவேண்டாம். அணுகுண்டு தயாரிப்பதில் நாமும் வெற்றியுடன் முன் செல்வோம் ஆனால் அதற்காக அத்துமீறி நாம் எந்த காரியத்திலும் ஈடுபடமாட்டோம்.

பாகிஸ்தான் அல்ல. வேறெந்த நாடும் நம்முடைய பாதுகாப்புக்கு இடைஞ்சலை ஏற்படுத்தினால் அதைப் பார்த்துக் கொண்டுசும்மா இருக்கமாட்டோம் பாகிஸ்தானுக்கு பதிலடிகொடுக்க இந்தியா தயாராக இருந்து வருகிறது.

நமது ராணுவ பலத்தில் நாம் மிகுந்த நம்பிக்கை கொண்டு இருக்கிறோம், நாட்டின் பாதுகாப்புதான் நமக்கு மிகவும் முக்கியம் வாய்ந்தது. நாட்டைப் பாதுகாப்பதில் நாம் அனைவரும் ஒற்றுமையுடன் ஈடுபடுவோம். அணுகுண்டு தயாரிக்கத் தேவைப்படும் யூரேனியத்தை பாகிஸ்தான் லிபியாவிலிருந்து தருவித்திருப்பதாக தகவல் வந்துள்ளது. 200 டன் யூரேனியத்தை அது இறக்குமதி செய்துள்ளதாகவும் தெரிகிறது.

### திறமை குறைந்தவர்கள் அல்ல

அதற்காக நாம் பீதிஅடைய வேண்டாம். நமது ராணுவமும், அணுவியல் ஆராய்ச்சி நிபுணர்களும் வேறெந்த நாட்டின் ஆராய்ச்சியாளர்களையும்விட திறமையில் குறைந்தவர்கள் அல்ல. ஒரு முடிவை நாம் மேற்கொள்ளுவோமேயானால் அதை வெற்றி அடையச் செய்வதில் நமது விஞ்ஞானிகள் சாதனைகளை ஏற்படுத்துவார்கள்.

தங்களது விஞ்ஞானிகள் பெரும் அளவு முன்னேறியுள்ளதாக பாகிஸ்தான் தம்பட்டம் அடித்துக்கொள்ளட்டும். அத்தகைய விளம்பரம்அவர்களுக்குஇப்போது தேவைப்படுகிறது.

ஆனால் நமது அறிவியல் சாதனைகள் மகத்தானவை நமது வல்லுனர்கள் பாராட்டத்தக்கவர்கள்.

பாகிஸ்தானின் அணுவியல் அறிவிப்புகள் பற்றி பிரதமருக்கும் பாதுகாப்பு அமைச்சருக்கும் கருத்து வேறுபாடுகள் எதுவும் இல்லை.

பாதுகாப்பு நடவடிக்கைகளை ராணுவம் மிகுந்த எச்சரிக்கையுடன் மேற்கொண்டிருக்கிறது.

இவ்வாறு மத்திய அமைச்சர் குர்ஷீத் ஆலம்கான் கூறினார்.

## காவல் நிலையத்தில் காதலர் திருமணம்

சென்னை, ஆக. 8— காவல் நிலையத்தில் காதலர்கள் திருமணம் செய்து கொண்டார்கள். இதை போலீஸ் இன்ஸ்பெக்டரே நடத்திவைத்தார்,

இந்த ருசிகர சம்பவம் சென்னை ராயப்பேட்டை போலீஸ் நிலையத்தில் நடந்தது.

மணப்பெண்ணின் பெயர் நசீமா (வயது 19) மாப்பிள்ளையின் பெயர் கலீல் (வயது23) சென்னை ராயப்பேட்டை பெக்காபுரத்தை சேர்ந்தவர்கள். நீண்ட நாட்களாக இவர்கள் ஒருவரை ஒருவர் காதலித்து வந்தனராம். இவர்களில் திருமணத்துக்குபெண்ணின்பெற்றோர்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர்.

ஏற்றுமதிநிறுவனம்ஒன்றில் இருவரும் வேலை செய்து வருகிறார்கள், கடந்த சில நாட்களாக காதல் ஜோடி காணாமல் போய்விட்டது.

இதுபற்றிய புகாரை தொடர்ந்துராயப்பேட்டை போலீசார் இவர்களைத் தேடி வந்தனர்.

காதலர்கள்போலீஸ்நிலையத்துக்கு வந்தனர். இன்ஸ்பெக்டர் கோதண்டராமன், சப் இன்ஸ்பெக்டர் ராஜகோபாலன் ஆகியோரை சந்தித்து விஷயத்தைக் கூறினர்.

பெற்றோர்களை அழைத்து வைத்துக் காவல் நிலையத்திலேயே நசீமாவுக்கும் கலீலுக்கும் இன்ஸ்பெக்டர் கோதண்டராமன் திருமணத்தை ஜாம் ஜாம்என்று நடத்தி வைத்தார்.

## சத்துணவு திட்ட இலக்கியப் போட்டி

மதுரை, ஆக. 8— முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்தை மையமாக வைத்து ஓரங்க நாடகம் எழுதும் போட்டியை மாநில அளவில், மாணவர்களிடையேதமிழாசிரியர் முன்னேற்றக்கழகம் நடத்தியது. இதன் பரிசளிப்பு விழா மதுரை ஒய். எம், சி. ஏ. அரங்கத்தில் நடைபெற்றது.

சேடப்பட்டி முத்தையா எம்.எல்.ஏ., திருப்பரங்குன்றம் எம். மாரிமுத்து எம்.எல்.ஏ., ஆண்டிப்பட்டி பாண்டித்துரை, மதுரைடாக்டர் திரு அப்சர் உசேன், மு. மாரியப்பன், புலவர் கா. முத்துச்சாமி ஆகியோர் விழாவில் பேசினர்.

இலக்கியப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு புரட்சித்தலைவர் உருவம் பொறித்த பதக்கங்களையும், சான்றிதழ்களையும் சட்டமன்ற மேலவைத் தலைவர் டாக்டர் சிலம்புச் செல்வர் ம.பொ.சி. வழங்கினார்.

## மாணவ கம்பர்களுக்கு விருது

சென்னை, ஆக. 8— மாணவர்களில் கம்பனைப் போல் கவிபாடும் வல்லமை படைத்த சிறந்த மாணவனைக்கம்பனாகத் தேர்ந்தெடுத்து விருது வழங்கும் திட்டத்தை கம்பன் கழகம் அறிவித்துள்ளது. இந்த விருதை எம். எஸ். சுப்புலட்சுமியும் அவரது கணவர் சதாசிவமும் வழங்குகின்றனர், இதை நிருபர்களிடம் தெரிவித்த கம்பன் கழகத்தலைவர் முன்னாள் நீதிபதி இஸ்மாயில், கம்பன் பற்றிய சிறந்த ஆராய்ச்சியாளருக்கு சாந்தி அறக்கட்டளை விருதுவழங்குவது குறித்தும் பரிசீலித்து வருவதாக தெரிவித்தார்.

கம்பன் விழா சென்னையில் வரும் 9-ந் தேதி முதல் மூன்று நாட்களுக்கு நடப்பதாகவும், இதையொட்டி மாணவர்களுக்கு பல போட்டிகள் நடத்தப்பட்டு, பரிசு வழங்கப்படுமென்றும் இஸ்மாயில் தெரிவித்தார்.

## ரயில்வே மக்கள் தொடர்பு அதிகாரி

சென்னை, ஆக. 8—தென் பிராந்திய ரயில்வேயின் மக்கள் தொடர்பு அதிகாரியாக எம். சண்முகமும், முதுநிலை மக்கள்தொடர்பு அதிகாரியாக பி. நாராயணனும் (மணி) நியமிக்கப்பட்டுள்ளனர். இருவரும் தங்கள் பொறுப்புகளை ஏற்றுக்கொண்டனர்.

# காஷ்மீர் அரசியலில் திருப்பம் - பரூக்கிற்கு பிரதமர் ராஜீவ் அழைப்பு

புதுடெல்லி, ஆக. 8— இன்னும் இரண்டு தினங்களில் பிரதமர் ராஜீவ் காந்தியை காஷ்மீர் முன்னாள் முதல்வர் டாக்டர் பரூக் அப்துல்லா சந்தித்துப் பேசுகிறார்.

பிரதமர் ராஜீவ் காந்தியின் அழைப்பின் பேரில் பரூக் டெல்லிக்குவருகிறார்.

1984ம் ஆண்டு காஷ்மீரில் டாக்டர் பரூக் அப்துல்லாவின் அமைச்சரவை கவிழ்க்கப்பட்டது. பரூக் அப்துல்லாவின் மைத்துனரான ஷா தலைமையில் அமைச்சரவை அமைக்கப்பட்டது. அந்த அமைச்சரவைக்கு இந்திரா காங்கிரஸ் கட்சி ஆதரவு அளித்து வருகிறது.

என்றாலும் எல்லையோர மாநிலமான காஷ்மீர் அரசியல் எப்போதும் ஊசலாடிக் கொண்டே இருக்கிறது.

ஷா அமைச்சரவையைதற்போது பொதுமக்களும் விரும்பவில்லை. இந்திரா காங்கிரஸ் கட்சியினரும் விரும்பவில்லை.

### ஆலோசனை

இரண்டு வாரங்களுக்கு முன்னர் காஷ்மீர் சட்டமன்ற இந்திரா காங்கிரஸ் உறுப்பினர்களை ராஜீவ்காந்தி அழைத்திருந்தார். தனித் தனியாக அவர்களின் கருத்துக்களை அறிந்தார்.

ஷா அமைச்சரவைக்கு ஆதரவு அளிக்க விரும்பவில்லைஎன்றுஅவர்கள் கருத்துத் தெரிவித்தனர்.

இரண்டு தினங்களுக்கு முன்னால் காஷ்மீர் மாநில இந்திரா காங்கிரஸ் தலைவர் முகமது சையதை அழைத்து பிரதமர் ராஜீவ் பேசினார்.

அதனைத் தொடர்ந்து பரூக் அப்துல்லாவிற்கு ராஜீவ் காந்தி அழைப்பு விடுத்திருக்கிறார். அந்த அழைப்பை ஏற்றுக் கொண்டிருப்பதாக பரூக் தெரிவித்தார்.

பரூக் அப்துல்லாவை ராஜீவ் அழைத்து இருப்பது பல்வேறு முனைகளிலும் அரசியல் முக்கியத்துவம் வாய்ந்ததாகும்

### சூருதி இறங்கியது

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் பரூக்அப்துல்லா அமைச்சரவையைக் கவிழ்ப்பதில் இந்திரா காங்கிரஸ் கட்சிதான் பெரும்பங்கு வகித்தது என்றாலும் இன்றைய சூழ்நிலையில் பரூக் அப்துல்லா தீண்டத்தகாதவர் அல்ல என்று இந்திரா காங்கிரஸ் கருதுகிறது.

ராஜீவ் காந்தி பிரதமரான பின்னர் பரூக் அப்துல்லாவும் மைய அரசைக் கடுமையாக விமர்சிப்பதை விட்டு விட்டார்.

மையத்தில் இந்திரா காங்கிரஸ் ஆட்சிக்கு எதிராக அனைத்து எதிர்க் கட்சிகளையும் அணி திரட்டுவதில் அன்று ஆந்திர முதல்வர் என். டி. ராமராவும் காஷ்மீர் முதல்வர் பரூக் அப்துல்லாவும் தான் முன்னணித் தளபதிகளாக இருந்தனர். இப்போது இருவருமேஅந்த எதிர்ப்பு ஆயுதத்தைக்கீழே போட்டு விட்டனர்.

காஷ்மீரில் பரூக் அப்துல்லா தலைமையில் இருந்த அரசைக் கவிழ்த்ததில் எந்த அரசியல் ஆதாயமும் இல்லை என்பதனை இப்போதுஇந்திரா காங்கிரஸ் கட்சித்தலைமையும் உணர்ந்திருக்கிறது.

### முக்கிய நிகழ்ச்சி

இந்த நிலையில் பிரதமர் ராஜீவ் காந்தி-பரூக் அப்துல்லாசந்திப்பு அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது.

காஷ்மீரில் இன்று ஏற்பட்டுள்ள குழப்ப நிலைக்கு பிரதமர்முற்றுப்புள்ளி வைப்பார் என்று நம்புகிறேன். அந்த வகையில் அவர் எடுக்கும் முயற்சிக்கு ஆதாவு தருவேன் என்று பரூக்அப்துல்லா நிருபர்களிடம் கூறினார்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் என்னுடைய ஆட்சி கவிழ்க்கப்பட்டதற்கு இந்திரா காங்கிரஸ் கட்சியை மட்டுப் குற்றம்சாட்ட மாட்டேன். எங்கள் கட்சியான தேசிய மாநாட்டுக் கட்சியில் துரோகிகளும், கருங்காலிகளும் இருந்தார்கள். ஆட்சிக் கவிழ்ப்பதற்கு அவர்களும் காரணமாக இருந்தார்கள் என்றும் அவர் கூறினார்.

# மதுரை பல்கலைக் கழகத்தில் ரூ.4 கோடியில் விஞ்ஞான பூங்கா

மதுரை, ஆக. 8— மதுரை காமராஜ்பல்கலைக் கழகத்தின் வளாகத்தில் ரூபாய் 4 கோடி செலவில், தமிழகத்திலேயே முதன் முறையாக விஞ்ஞான தொழில்நுட்ப முனைவர்கள் பூங்கா அமைக்கப்பட உள்ளது

இத்தகவலை தேசிய தொழில்நுட்ப வளர்ச்சிகுழு ஆலோசகரும், பூங்கா தொடங்குதல் கலைவருமான தியாகராசன் நிருபர்களிடம் கூறினார்.

அவர் கூறியதாவது —

விஞ்ஞான தொழில் நுட்ப பூங்கா என்பது உயர்ந்த தொழில் நுட்ப நுணுக்கமும் சுற்றுபுற சூழ் நிலையைக் கெடுக்காத செயல்முறைகளும்கொண்ட தொழிற்சாலைகள் ஒரே இடத்தில் அமைவது

பல்கலைக் கழகங்கள், தொழிற்சாலைகள் ஒன்றுக் கொன்று தொடர்பின்றி இதுவரை இருந்து வந்தது. இந்த விஞ்ஞான பூங்கா இவை இரண்டையும் இணைக்கும் பாலமாகும்.

அமெரிக்கா, பிரிட்டன் போன்ற நாடுகளில் இது போன்ற விஞ்ஞான பூங்காக்கள் அதிகம் தோன்றி உள்ளன. ஆஸ்திரேலியாவில் விஞ்ஞான பூங்காக்கள் அதிகமாகி வருகின்றன.

இந்த பூங்காவில் உயர் தொழில் நுட்பம் கொண்ட தொழிற்சாலைகள் மைக்ரோ எலக்ட்ரானிக், பயோ டெக்னாலஜி அடிப்படையில் தொழிற்சாலைகள் அமைக்கப்படும்.

பல்கலைக்கழகம் தங்களின் ஆராய்ச்சி, புதிய கண்டுபிடிப்புகளைதொழிற்சாலைகளில் பயன்படுத்த இந்த பூங்கா உதவி செய்யும். தொழில்களுக்கு வழிகாட்டியாகவும் இது விளங்கும்.

இந்திய பல்கலைக்கழகங்களில் விஞ்ஞான பூங்கா ஆரம்பிக்கப்பட்டால் வேலை வாய்ப்பிற்கு புதிய வழிமுறைகள் உண்டாகும் தொழில் வளர்ச்சி அதிக அளவில் உண்டாகும்.

மதுரை-போடி பிரதான சாலையில் காமராஜ் பல்கலைக்கழகவளாகத்தில் 250 ஏக்கர் நிலப்பரப்பில் இந்த பூங்கா அமைக்கப்படும். இது அமைக்க ரூபாய் 4 கோடி செலவாகும்.

இந்தபூங்காஒருசுயேச்சையான அறக்கட்டளையால் நிர்வகிக்கப்படும். பூங்காவின் தலைவராக பல்கலைக் கழகத் துணைவேந்தர் இருப்பார். 12 பேர் உறுப்பினர்களாகஇருப்பார்கள். அவர்களில்சிண்டிகேட் நியமிக்கும் 3பேர், தொழில் அதிபர், வங்கி அதிகாரி ஆகியோர் இருப்பர்.

இந்த பூங்காவில் மாணவர்கள் குறிப்பிட்ட காலம் வரை தங்கி பயிற்சி பெறுவார்கள்.

இவ்வாறு தியாகராசன் கூறினார். பேட்டியின் போது பல்கலைகழகதுணைவேந்தர் ஜானகிராமன், பேராசிரியர் கிருஷ்ணசாமி ஆகியோர் உடன் இருந்தனர்.



## மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

திறந்தவெளிப் பல்கலைக் கழகப் பட்டமும் படிப்புத் திட்டம்

(நிறுவனம்: 1977)

## அனுமதி அறிவிப்பு

தமிழக அரசினால் அங்கீகரிக்கப்பட்டது
(G. O. Ms. No. 528-தேதி-18-5-85)

இந்தியா முழுவதிலுமுள்ள தமிழ் எழுதப்படிக்கத் தெரிந்த மாணவர்கள் இத்திட்டத்தில் சேரலாம் போதனைஅஞ்சல் வழி நடைபெறும். பயிற்சி மொழி தமிழ் மட்டுமே.

படிப்புத்திட்ட நிலைகள்: அறிமுகநிலை, தொடக்கநிலை அடிப்படை நிலை.

அ. அறிமுக நிலை: (ஒரு வருடம்)

சேரத்தகுதி: கல்வித்தகுதிஎதுவும்தேவையில்லை: 14 வயது அல்லது அதற்கு மேற்பட்டவர்கள் இதில் சேரலாம். தேர்வு கிடையாது.

ஆ. தொடக்க நிலை: (ஒரு வருடம்)

சேரத்தகுதி: 8 ஆம் வகுப்புத் தேர்ச்சி அல்லது அறிமுகநிலைப் பூர்த்தி

அறிமுகநிலையிலும், தொடக்கநிலையிலும் பாடங்கள்

மொழிகள் (கட்டாயம்) — தமிழ்—ஆங்கிலம்

விருப்பப்பாடங்கள் (ஏதேனும் மூன்று) —கணிதம், பொதுவிஞ்ஞானம் வரலாறு, பொருளியல், அரசியல், புவியியல், வணிகவியல்.

இ. அடிப்படைநிலை (இரண்டு வருடங்கள்)

சேரத் தகுதி:

முதலாம் ஆண்டு: 10ஆம் வகுப்புத் தேர்ச்சி; அல்லது தொடக்கநிலைத் தேர்ச்சி.

இரண்டாம் ஆண்டு: மெட்ரிக் தேர்ச்சி; புகுமுக வகுப்பு தேர்ச்சியின்மைத் அல்லது அடிப்படைநிலை முதலாம் ஆண்டுத் தேர்ச்சி அல்லது 11ஆம் வகுப்புத் தேர்ச்சி, பூர்த்தி (Completed) விருப்பப்பாடம் (Elective) மட்டும் தேறாமை

அடிப்படை நிலைப்பாடங்கள்:

மொழிகள் கட்டாயம் — தமிழ், ஆங்கிலம்

விருப்பப் பாடங்கள் (ஏதேனும் நான்கு) — கணிதம், வரலாறு, பொருளியல், அரசியல், புவியியல், வணிகவியல், கணக்கியல், வங்கியியல், உளவியல், புறச்சூழல் கல்வி, சிறப்புத்தமிழ்.

முக்கிய குறிப்பு: புகுமுக வகுப்பு நிலையில் ஏதேனும் பிரிவு அல்லது பிரிவுகள் அல்லது பாடங்களைப் பாக்கி வைத்திருக்கும் பழைய புகுமுக வகுப்பு மாணவர்கள் அவ்வாறு பாக்கியுள்ள பிரிவு அல்லது பிரிவுகள் அல்லது பாடங்களை மட்டும் திறந்தவெளிப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து தேர்வில் எழுதிப் புகுமுக வகுப்பைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். பிரிவு II இல் அவர்கள் திறந்த வெளிப் பல்கலைக்கழகம் வழங்கும் கலையியல் பிரிவையோ அல்லது பாடத்தையோ தேர்வு செய்து கொள்ளவேண்டும்.

இத்திட்டத்தில்ஒரு முழு ஆண்டை நிறைவு செய்த மாணவர்கள்தேவைப் பட்டால் விருப்பப் பாடங்களை மாற்றிக் கொள்ளலாம்.

அறிமுக நிலை, தொடக்க நிலை, அடிப்படைநிலை முதலாம்ஆண்டு, இரண்டாம் ஆண்டு விண்ணப்பம் — ரூ. 10/- (ரூபாய் பத்து மட்டும்)

விதிமுறை விளக்கக் குறிப்பும் விண்ணப்பத்தாளும் வேண்டுவோர், "இயக்குநர், அஞ்சல்வழிக் கல்வித் துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம்" என்ற பெயரில் வரன்முறை வங்கி (Scheduled Bank) ஒன்றில் பத்து ரூபாய் கட்டி பார்வை வரைவு (Demand draft) அனுப்பவேண்டும். அத்துடன் சுயவிலாசமிட்ட தபால் தலை ஒட்டப்படாத 25×17செ.மீ. அளவுள்ள உறை ஒன்று அனுப்புதல் வேண்டும். அனுப்ப வேண்டியமுகவரி துணை நெறியாளர், திறந்த வெளிப் பல்கலைக் கழகம் மதுரை காமராசர் பல்கலைக் கழகம் மதுரை—625021,

பார்வையற்றோர், காது கேளாதோர், பேசத் திறனற்றோர்க்கும் பயிற்சிக் கட்டண சலுகை உண்டு.

சலானும், அஞ்சல் ஆணைகளும், பணவிடைகளும் ரொக்கமும் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. விண்ணப்பப் படிவம் பதிவு அஞ்சலில் அனுப்பப்படும்.

பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்பங்களை ஏற்றுக் கொள்ள கடைசி நாள் 31-8-1985

முக்கிய குறிப்பு:- தமிழக அரசின் ஆணை G. O. MS. No. 528/18-5-83ன்படி தொடக்க நிலைக்கல்வி 10 ஆண்டு எஸ். எஸ். எல். சி, கல்விக்கும், அடிப்படை நிலைக்கல்வி, மேல்நிலைக்கல்வி (+2 நிலை)க்கும் சமமானவை என அறிவிக்கப்பட்டுள்ளது. இக்கல்வி பயின்றவர்கள் தமிழகத்தில் பொது ஊழியத்தில் சேரத் தகுதியுடையவர்கள் ஆகிறார்கள்.

நெறியாளர்

# சந்தனமர திருட்டுகள்: திமுக. ஆட்சி முறைகேடு

## ஆர். எம். வீ. அம்பலப்படுத்தினார்

நாட்ராம்பள்ளி, ஆக, 8- தி. மு. க. ஆட்சியில் அரசு சந்தன மரங்கள் தி.மு.க. வினரின் பட்டா நிலங்களுக்கு அபேஸ் செய்யப்பட்ட விவரங்களை அமைச்சர் ஆர். எம். வீ. அம்பலப் படுத்தினார்.

வட ஆர்காடு மாவட்டம் நாட்ராம்பள்ளி தொகுதியில் தெக்குப்பட்டு கிராமத்தில் தமிழக அரசு ரூபாய் 85 லட்சம் செலவில் அமைத்துள்ள சந்தனப் பொருட்கள் தொழிற்சாலையின் திறப்பு விழா நேற்று ஊராட்சி அமைச்சர் ப. உ. ச. தலைமையில் நடந்தது.

தமிழகஅரசின் செய்தி, அறநிலையம் மற்றும் வனத்துறை அமைச்சர் ஆர்.எம். வீ. தொழிற்சாலையைத் திறந்து வைத்தார்.

அப்போது அவர் பேசியதாவது:-

7 ஆண்டு கால போராட்டத்துக்கு இடையே இந்த சந்தன எண்ணை தயாரிக்கும் தொழிற்சாலை தமிழகத்தில் முதன்முதலாக திறக்கப்படுகிறது.

தமிழகமுதல்வர் புரட்சித் தலைவர் 1978 ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையில் இந்த தொழிற்சாலை பற்றிய திட்டத்தை தெரிவித்தார்.

### ஜனதா மறுப்பு

அன்று மத்திய அரசின் ஆட்சிப் பொறுப்பில் இருந்த ஜனதா அரசு இந்த திட்டத்தை நிறைவேற்ற மறுத்தது.

அதற்குப் பிறகுஎப்படியாவது இந்தத்திட்டத்தை உருவாக்க வேண்டும் என்று புரட்சித்தலைவர் இயந்திரத்திற்கு இத்தனை லட்சம், தொழிற்சாலைக்கு இவ்வளவு என்று பல பிரிவுகளாக பிரித்துக் கொடுத்து அனுமதி பெற்றார்.

1982-ம் ஆண்டில் ரூபாய் 54 லட்சம் செலவில் கட்டி முடிக்கப்பட வேண்டும் என்று ஆணை பிறப்பிக்கப் பட்டது. இன்று அனுமதி கிடைக்க காலதாமதம் ஆனதாலும், இப்போது பொருட்கள் விலை ஏறிவிட்டதாலும் 85 லட்சம் செலவில் அமைக்கப்பட்டுள்ளது.

2 ஆண்டுகளில் முடிக்கப் பட்டு கடந்த 3 மாதத்துக்கு முன்பாகவே செயல்படத் தொடங்கி வெள்ளோட்டம் பார்க்கப்பட்டு இந்த தொழிற்சாலையில் இருந்து தயாரிக்கப்பட்ட சந்தன எண்ணை ஆராய்ச்சிக்கும் அனுப்பப்பட்டது.

### சந்தன எண்ணெய்

இது இன்று உலகத்திலேயே இயற்கையாகக் கிடைக்கிற சந்தனத்தில் இருந்து தயாரிக்கிற மிகச் சிறந்த எண்ணையாக விளங்குகிறது. எண்ணை எடுக்கும் போது சக்கையை வடிகட்டி வடி கட்டி இறுதிச் சத்து வரும்வரை பிழிந்து எடுக்கிற தன்மை இந்தியா விலேயே இந்த தொழிற் சாலையில் தான் உள்ளது.

ஆயிரம் ஆயிரம் ஆண்டு காலமாக தமிழகத்தில் சந்தன மரம் பெருமை தேடித் தந்து கொண்டு இருக்கிற மரமாக விளங்குகிறது.

ஆனால் புரட்சித் தலைவர் ஆட்சி காலத்தில் தான் சந்தனத்தை எண்ணையாக வடித்து உலக நாடுகளிடையே வியாபாரம் செய்யும் வகையில் ஒரு தொழிற்சாலை உருவாகும் வாய்ப்பை உருவாக்கித் தந்துள்ளார்.

### திமுகவின் சுயநலம்

சந்தன மரத்தை இலக்கியத்தில்தான் பார்க்க வேண்டும் என்று யாரோ (கருணாநிதி) எழுதியதாக அமைச்சர் ப. உ. சண்முகம் சொன்னார். அவர்களும் 7, 8 ஆண்டு ஆட்சி செய்தார்கள், அவர்கள் காலத்திலும் சந்தன மரம் இருந்தது. சந்தனக்காடு இருந்தது. அது இலக்கியத்தில் சொல்லப்பட்டதுபோல இயற்கையாக இருந்தது. ஆனால் அவர்களின் கட்சிக்காரர்கள் (திமுகவினர்) வனத்திலே உள்ள சந்தன மரத்தை வெட்டி தங்கள் சொந்த நிலங்களில் நட்டார்கள். காட்டில் வளர்ந்த மரத்தை இது பட்டா நிலங்களில் வளர்ந்தது என்று வெட்டி விற்க ஆட்சியாளர்களும் உடந்தையாக இருந்தார்கள்,

காடுகளில் வளர்ந்த மரம் இடம் பெயர்ந்து வந்து, பட்டா நிலங்களில் வளர்ந்ததாக நாட்டையே ஏமாற்றிய நிலைமையும் உண்டு. அதில் கைப்பற்றப் பட்ட மரங்கள், முதிர்ச்சி அடையாததால் இன்றும் மணம் இன்றி பழுதுபட்டு காய்ந்து கிடக்கின்றன.

ரூபாய் 85 லட்சம் செலவில் சந்தன எண்ணெய் தயாரிக்கும் தொழிற்சாலை இப்போது திறக்கப் பட்டுள்ளது.

### ரூபாய் ஒன்றரைக் கோடி திட்டம்

சந்தனப் பட்டைகளில் இருந்து பவுடர் மற்றும் உதிரிப்பொருள் தொழில்களை உருவாக்குகின்ற திட்டம் இங்கு மேலும் ரூபாய் 35 லட்சம் செலவில் வர இருக்கிறது.

இவை இரண்டையும் சேர்த்தால் ஏறத்தாழ ரூபாய் 1½ கோடி வரும்.

இந்தத் திட்டங்கள் இறுதி வடிவம் பெற்று நிறைவேறும் போது ரூபாய் 1½ கோடியாகக் கூட வரக் கூடும்.

இங்கு 200 பேர்களுக்கு மேல் வேலை பார்க்கிறார்கள். வெளிநாட்டில் இருந்து அன்னியசெலாவணியாக ஆண்டுக்கு ரூ. 3 கோடி வருகிறது என்பது மட்டுமல்ல, இதன் மூலம் தமிழகத்துக்கு ஆண்டுக்கு ரூபாய் 1 கோடியே 30 லட்சம் வருமானம் வருகிறது.

இந்தியாவிலேயே மிகச் சிறந்த சந்தனம் கிடைக்கும் தமிழகத்தில் இப்படிப்பட்ட தொழிற்சாலையை அமைக்க முந்திய ஆட்சியாளர்கள் கொண்டு வரவில்லை. அந்த வாய்ப்பை புரட்சித் தலைவர்தான் ஏற்படுத்தி தந்து இருக்கிறார்.

இதை குறைகூறுபவர்கள், இவ்வளவு காலமும் யாரும் உருவாக்காமல் இருந்து இருக்கிறார்கள் என்பதை எண்ணி எண்ணி வெட்கப் பட வேண்டும். வேதனைப் பட வேண்டும். வெட்கப்பட முடியாவிட்டால் சும்மாவாவது இருக்க வேண்டும்,

### கல் எறிவதா?

நம்முடைய ஊராட்சித் துறை அமைச்சர் ப. உ. ச. பேசும் போது, "கண்ணாடிவீட்டில் இருந்து கல் எறிகிறார்கள்" என்று கூறினார்.

கண்ணாடி வீட்டில் இருந்து எறிகிறார்கள் என்பது உண்மை. ஆனால் எங்கு எறிகிறார்கள் தெரியுமா? இமயமலையை நோக்கி எறிகிறார்கள்.

ஆகவே பயப்படவேண்டியவர்கள் கண்ணாடி வீட்டிற்குள் இருப்பவர்கள் தான். அவர்கள் ஏற்கனவே உடைந்துபோன கண்ணாடி வீட்டுக்குள் இருக்கிறார்கள். பிசுறுகள் அங்கங்கே தொங்கிக் கொண்டு நிற்கின்றன. அவர்கள் எறிகிற கல் கண்ணாடி பிசுறுகள் மீது மோதி அவர்கள் மீதே பாயும் என்பதுதான். நான் இப்போது சொல்கின்ற கருத்து.

இன்று இந்தியாவை எடுத்துக் கொண்டால் கர்நாடகத்தில் மிகுந்த அளவு சந்தன மரம் இருந்தது. இப்போது காடுகள் அழிந்து விட்டன.

அங்கு சந்தன சோப், பவுடர், ஊதுபத்தி செய்கிறார்கள். அவர்களுக்கு கிடைப்பது போக மீதி சந்தன மரங்களை நம்மிடம் இருந்து ஏலம் எடுக்கிறார்கள்.

வடக்கே உத்தரபிரதேசம் அரியானா மாநிலங்களில் இந்த எண்ணை ஆலைகள் உள்ளன. அவர்களும் நம்மிடம் இருந்துதான் ஏலத்தில் சந்தனம் வாங்குகிறார்கள். அது போக வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்து வருகிறோம்.

ஆண்டுக்கு 54 ஆயிரம் டன் ஏற்றுமதி செய்து வந்ததை ஜனதா ஆட்சி 19 ஆயிரம் டன்னாகக் குறைத்தது. போராடி போராடி இன்று மத்திய அரசு சில ரகங்களை அனுப்ப அனுமதித்து உள்ளது. டன்னுக்கு ரூபாய் 1½ லட்சம் வீதம் ரூபாய் 6 கோடிக்கு அதிகமாக மரம் ஏற்றுமதி செய்யப்படுகிறது.

எண்ணையைத்தான் ஏற்றுமதி செய்யவேண்டுமே தவிர— மரமாக ஏற்றுமதி செய்யக்கூடாது என்று வடக்கே உள்ள சில மாநிலங்களும், சில வியாபாரிகளும், எண்ணை ஆலைக்காரர்களும் மத்திய அரசிடம் எடுத்துக் கூறி வருகிறார்கள்.

மத்திய அரசு அப்படித் தடுத்தால், அது தமிழக முன்னேற்றத்தைத் தடுக்கும். தமிழகத்தில் ஆண்டுக்கு 2 ஆயிரம் டன் சந்தனமரம் கிடைக்கிறது. இந்த தொழிற்சாலைக்கு 400 டன் தான் தேவைப்படுகிறது. எனவே ஆண்டுக்கு 1,600 டன் சந்தன மரம் நாங்கள் வெளியே தர தயாராக இருக்கிறோம், அப்படி இருக்கும் போது வெளிநாட்டுக்கு ஓரளவு ஏற்றுமதி செய்வதை தடுக்க நினைப்பது சரி அல்ல.

நான் மத்திய அரசுக்கும் குறிப்பாக பிரதமருக்கும் சொல்லிக் கொள்கிறேன் எங்களது வளர்ச்சியைக் குறைக்கிற வகையில் ஆணை பிறப்பித்து விடாதீர்கள்,

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. பேசினார்.

---

# நாட் குறிப்பு

### துறையூர்

9-8-85 மாலை 7 மணிக்கு துறையூர் பிரசன்னா தியேட்டர் அருகில் து. செல்வராசு தலைமையில் பேசுவோர்.

அமைச்சர்கள் அரங்கநாயகம், நல்லுசாமி, அருணாசலம், சட்டமன்ற உறுப்பினர்கள் சரோஜா, வடிவேலு, ஜெகதீசன், தில்லை காந்தி, புருஷோத்தமன், ரத்தினவேலு மற்றும் ராஜா, குமாரசாமி, பெரியசாமி, ரகுபதி மற்றும் பலர்

### சுப்பு நிகழ்ச்சி

ஆக. 10-ந்தேதி மதுரை, 11, 12, 13 ந் தேதிகள் நெல்லை மாவட்டம், 14-ந் தேதி காரைக்குடி, 15-ந் தேதி மதுரை, மேலூர், 16-ந் தேதி திருச்சி, 17-ந் தேதி மணப்பாறை, 18-ந் தேதி சென்னை.

### பிரதமர் ராஜீவ் அசாம் செல்கிறார்

புதுடெல்லி, ஆக. 8— வெளிநாட்டவர், மற்றும் தேர்தல் முதலிய பல்வேறு பிரச்சினைகள் சம்பந்தமாக பேச்சுவார்த்தை நடத்த மத்திய உள்துறை அமைச்சர் எஸ்.பி. சவான் நாளை 9ம் தேதி அன்று அசாம் செல்கிறார்.

அசாம் மாநில முதல் அமைச்சர் ஹிதேஸ்வர் சைக்கியாவை அவர் சந்தித்துப் பேசுவார். அசாம் மாநில மாணவர் யூனியன் அசாம் கண சங்க்ராம் பரிஷத் ஆகியவற்றின் பிரதிநிதிகளையும் அவர் சந்திப்பார்.

காங்கிரஸ் நூற்றாண்டு விழா கவுகாத்தியில் நடைபெற விருக்கிறது.

அந்த விழாவில் கலந்து கொள்ள பிரதமர்ராஜீவ் காந்தி செல்லவிருக்கிறார். பிரதமர்ராஜீவ் அநேகமாக வரும் 12ம் தேதி கவுகாத்தி செல்வார் என்றுதெரிகிறது.

### பூட்டோ மகன் சடலம்

கேன்னஸ், ஆக. 8— பிரான்ஸ் நாட்டு தலைநகர் பாரிஸ் அருகே கேன்னஸ் என்ற இடத்தில் பாகிஸ்தான் முன்னாள் பிரதமர் பூட்டோவின் இளைய மகன் ஷாநவாஸ்கான் மர்மமான முறையில் இறந்துகிடந்தது தெரிந்ததே.

இதுகுறித்து நீதிபதிஒருவர் விசாரணை நடத்திவந்தார்

இப்போது விசாரணை முடிந்து விட்டது. மரணம் அடைந்த ஷாநவாஸ்கானின் உடல் அவரது உறவினர்களிடம் கொடுக்கப் பட்டுவிட்டது. இந்தச் சடலம் எப்போது பாகிஸ்தானுக்கு கொண்டு வரப்படும் என்பது தெரிவிக்கப்படவில்லை.

### குடும்பக் கட்டுப்பாடு: தலைமை செயலாளர் வேண்டுகோள்

சென்னை, ஆக. 8— குடும்பநல திட்டத்திற்கு புதிய சிந்தனைகள் என்பது குறித்து பத்திரிகை ஆசிரியர்களின் கூட்டம் ஒன்றை அரசு தலைமைச் செயலாளர் அந்தோணி கூட்டியிருந்தார்.

குடும்ப நலத்திட்டத்தைக் கையாண்டு வெற்றிகண்டவர்களின் சம்பவங்களை பத்திரிகையில் முக்கியத்துவம் கொடுத்து பிரசுரித்து, குடும்ப நலத்திட்டத்தை மக்கள் மனதில் பதிய வைக்க வேண்டியதின் அவசியத்தை வலிறுத்துவதற்கு ஏதுவாக பத்திரிகைகள் உதவி செய்ய வேண்டுமென கேட்டுக்கொண்டார்.

### மேட்டூர்

மேட்டூர் அணைக்கு விநாடிக்கு 17 ஆயிரம் கன அடி தண்ணீர் வந்துகொண்டிருக்கிறது. அணையிலிருந்து 12 ஆயிரம் கன அடி தண்ணீர் திறந்து விடப் படுகிறது. மேட்டூர் அணையின் நீர் மட்டம் தற்போது 56 அடியாக இருக்கிறது.

### மறைவு

தேனி நகர கழக துணை செயலாளர் ஜெயமணியின் சகோதரர் ராஜாமணி காலமானார். சட்டமன்ற உறுப்பினர் வி. ஆர். ஜெயராமன், நகர செயலாளர் காராட்சி மற்றும் கழகத் தோழர்கள் சென்று இறுதி அஞ்சலி செலுத்தினர்.

---

# பிணம்தின்னிகழுகுபோல் போராட்டங்களை தேடி அலையும் திமுக தலைவர்

## அமைச்சர் திருநாவுக்கரசு தாக்கு

சென்னை, ஆக. 8- பிணம் தின்னிக் கழுகு போல் போராட்டத்தை தேடி அலைகிறார் கருணாநிதி என்று அமைச்சர் திருநாவுக்கரசு குறிப்பிட்டார்.

தஞ்சை மாவட்டம் பாபநாசம் நகரத்தில் கழகம்— இந்திரா காங்கிரஸ் மூற்போக்குக்கூட்டணி சார்பில் நடைபெற்ற நன்றி அறிவிப்புக்கூட்டத்தில் அமைச்சர் எஸ். திருநாவுக்கரசு ரெங்கசாமி, மூப்பனார் அரசுக் கொறடா துரை, கோவிந்தராசன், சட்டமன்ற உறுப்பினர் ராஜாராமன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

அமைச்சர் திருநாவுக்கரசு பேசுகையில் கூறியதாவது:-

கடந்த எட்டு ஆண்டுகளில் புரட்சித்தலைவர் செய்த பல்வேறு மக்கள் நலப்பணிகளால் தமிழகத்தில் மூன்றாவது முறையாகவும் புரட்சித்தலைவர் முதல்வர் ஆனார். அவர் பெயரைச் சொல்லி தமிழகத்தில் ஆட்சி அமைக்க முடிந்தது. அதுபோல் மத்திய அரசில் மீண்டும் ராஜீவ்காந்தி பிரதமராக முடிந்தது என்றால் அதற்குக்காரணம் மத்திய அரசு கடந்த காலங்களில் செய்துள்ள நல்ல காரியங்கள்.

### எல்லோரும் தொண்டர்களே

மாநிலஅரசும் மத்திய அரசும் இன்று ஒன்றுபட்டு பல நல்ல திட்டங்களை நடைமுறைப்படுத்தி வருகிறது. தமிழக முதல்வர், சத்துணவு திட்டம், தண்ணிறைவுத் திட்டம், இப்படிப் பல திட்டங்களை நிறைவேற்றி பொற்கால ஆட்சியைத் தமிழகத்தில் நடத்தி வருகிறார். ஜப்பானில் புரட்சித் தலைவர் நலமுடன் உள்ளார். எந்த சிகிச்சையும் தேவை இல்லையென்று டாக்டர் கானு கூறி உள்ள செய்தி தமிழக மக்களுக்கு தேனினும் இனிய செய்தியாகும், விரைவில் உலகம் சுற்றிய வாலிபனாக புரட்சித் தலைவர் தமிழகம் வரும் நாளை ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்து நிற்கிறது தமிழகம்.

கழகத்தில் பிரச்சினை உட்கட்சிப் பூசல் ஏதுமில்லை எல்லோரும் புரட்சித் தலைவருக்கு கட்டுப்பட்ட தொண்டர்களே. இரண்டு மூன்று தினங்களாக சில தி.மு.கழக ஆதரவுப் பத்திரிகைகள் என் பச்சை மாற்றிப் போட்டு, நான் பேசாததைப் பேசியதாக வெளியிட்டு குழப்பம் விளைவித்து வருகின்றன.

அமைச்சர்களுக்குள் மோதல் என்றும், முதல் வராகலாம் என்று கனவு காணாதீர் என்றும் அமைச்சர்களுக்குள் நாங்கள் சண்டை போட்டுக் கொள்வதுபோலவும் சில தி.மு.க. ஏடுகளில் செய்தி போடுகிறார்கள். பேசாததைப் பேசியதாகப் போடக் கூடாது. இது பத்திரிகை தர்மமல்ல.

புரட்சித் தலைவர்தான் எல்லாம். அவர்தான் உயிர். முப்பது இலட்சத்திற்கும் மேற்பட்ட தொண்டர்களின் உடல் அசைவது புரட்சித் தலைவரின் உயிரால்தான்.

### புகழ்பாடும் குயில்கள்

புரட்சித் தலைவர் வெளிநாட்டில் இருக்கும் போது கட்சிக்குள் உட்பூசல் என்று செய்திகள் போடுகிறார்கள். கழகத்தில் அணிகள், கோஷ்டிகள், உட்பூசல்கள் ஏதும் இல்லை ஒரே அணி ஒரே கோஷ்டி தான் உண்டு. அது புரட்சித் தலைவரின் அணிதான். புரட்சித் தலைவரின் கோஷ்டி தான் கழகம் மன்றம் -இளைஞர் அணி- தொழிற்சங்கம்-மகளிர் அணி போன்ற எல்லா அமைப்பினரும் புரட்சித்தலைவரின் புகழ்பாடும் புரட்சித் தலைவரின் தோட்டத்துக் குயில்களே.

### சாவு மணி அடிக்கப்படும்

செத்துப்போன ஆட்சி என்று அன்பழகன் பேசுகிறார். பூனை கண்ணை மூடினால் உலகம் இருண்டு விட்டது என நினைப்பது போல் செத்துப்போன தி.மு.க.வின் பார்வையில் உயிரோட்டமுள்ள ஆட்சி எப்படித் தெரியும்? விரக்தின் விளிம்பில் அன்பழகன் தமிழ் மக்களைத் திட்டுகிறார்.

கருணாநிதியோ பிணம் தின்னிக் கழுகு போல் போராட்டங்களைத் தேடி வட்டமிட்டு அலைகிறார். இவர்களின் அவதூறுகளை முறியடிப்பதே நம்வேலை.

வரும் பஞ்சாயத்து நகராட்சி, ஒன்றிய தேர்தல்களோடு தி.மு.க.-வுக்குச் சாவு மணியடிக்க கழகத் தொண்டர்கள் அணிதிரண்டு வேகமுடன் இப்போதே செயல்படத் துவங்கிட வேண்டுகிறேன்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

### பண மோசடி: வங்கி ஏஜெண்ட் தலைமறைவு

மதுரை, ஆக. 8— மதுரை வங்கி ஒன்றில் ரூபாய் 8 ஆயிரம் மோசடி செய்த வங்கி ஏஜெண்டை காவல் துறை அதிகாரிகள் தேடி வருகின்றனர்.

மதுரை ரத்னாபுரத்தைச் சேர்ந்தவர் சுப்பையா. வயது 60. மதுரை பேலஸ் ரோட்டில் வங்கி ஒன்றில் பிக்மி ஏஜெண்டாக இவர் பணிபுரிந்து உள்ளார்.

தினசரி கடைகளில் பணம் வசூல் செய்து, வாரம் ஒரு முறை வங்கியில் செலுத்துவார்.

ஆனால் கடந்த 20-7-84 முதல் 26-7-84 முடிய வசூல் செய்த தொகை 8,264 ரூபாயை வங்கியில் கட்டவில்லை. வங்கியில்கட்டாமல் ராஜினாமா கடிதம் எழுதி கொடுத்துவிட்டு தலைமறைவாகி விட்டார். அவர் மீது வங்கி அதிகாரி காவல் துறையினரிடம் புகார் கொடுத்துள்ளார்.

அவர் மீது காவல் துறையினர் வழக்கு பதிவு செய்து சுப்பையாவை தேடி வருகின்றனர்.








Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road MADRAS-600 029.